## கணபதி துதி

**தாழம் மறுத்திட்டத் தம்பிரான் பிள்ளையே**
**வேழ முகத்து விநாயகனே -- நீளும்**
**பிறப்பறுக்கும் பெம்மான் புகழ்பாட என்றும்**
**அறவோனே ஆதரவு தா.**

## இறை வணக்கம்

**கல்லாலின் கீழிருந்துக் காட்டிய ஆகமத்தை**
**நல்லார்வாய்க் கேட்ட நான்மறையைச் ---- சொல்லவே**
**எண்ணியத் திண்ணம் இனிதே நிறைவேற**
**அண்ணலே ஆற்றல் வழங்கு.**

## திருச்சிற்றம்பலம்

## குறள் வெண்பா

**ஓங்காரத்தி னுட்பொருனை உன்னப் புகுந்திடின்**
**ஆங்காரம் நீங்கு மறி.** 1

**நீக்குவனக் கேண்மினே நீங்காப் பசுபாசம்**
**ஆக்குன அன்பே அறம்.**
2

**தன்னை உணர்ந்திடவே தத்துவக் கூட்டுறவு**
**என்னே இறையோன் விதி.** 3

**முப்பொருளில் நீயாரோ மூவினை விட்டகல**
**எப்பரிசு வேண்டுவ துன்.** 4

**சிவனடியா ரென்னும் சிறப்புறு பட்டம்**
**எவரளிப்பா ரெண்ணத் துணி.** 5

அஞ்செழுத்துள் ஓரெழுத்தாய் நின்றப் பெருமையதை
நெஞ்சழுத்தி நிற்பாய் நிமிர்ந்து. 6

உள்ளங் கவர்ந்ததொரு உத்தமனின் தன்மையினைத்
தெள்ளத் தெளிந்தார்வாய்க் கேள். 7

தத்துவங்க ளாறாறைத் தந்தபொருட் திண்மையினை
புத்தித் தெளிந்தார்வாய் வாங்கு. 8

நாழேழு ஆகமங்கள் நவின்றப் பெருமானைப்
பாரேழும் போற்றுவதைப் பார்.
9

ஆக்கை நிலையாமை ஆமாறு கண்டிடத்
தீக்கைத் துணையாகும் தேடு. 10

## திருச்சிற்றம்பலம்

இம்மை மறுமை இருவினை இவ்வகை
செம்மையாய்க் கண்டு தெளி.
1

ஆகாமியஞ் சஞ்சிதம்பி ரார்த்த மிவைமூன்றும்
போக்கிடப் பாடு படு. 2

தன்னை உணர்ந்திடத் தத்துவம் கூட்டினான்
அண்ண லருளினைக் காண். 3

ஊழின் வலிமை உணருக நன்நெஞ்சே
காழிக் கடவுளைப் போற்று. 4

இருவினை யின்றேல் இறப்பும் பிறப்பும்
ஒருபோதும் வாரா துணர். 5

நன்றேதுந் தீதேது நல்லார் மொழிகேட்க

வென்றோதும் வார்த்தை வரும். 6

கற்குங் கலையெலாங் காட்டும் கடவுளைப்
பற்றத் துணித்லே பாங்கு
7

கூலி கொடுத்தினும் கூடா ஒருவினைக்
காழிப் பதியான் கழல். 8

பிரியான் பிறப்பிலி பிஞ்ஞகன் திருத்தாள்
அரியானும் காணா அன்பு. 9

புரியாத இன்பம் புரிவிப்பா னண்ணல்
திருவினும் மாப்பெரிது தேர். 10

திருச்சிற்றம்பலம்

என்பணி மார்பன் எருதேறும் வள்ளலின்
அன்பை அறிந்திடப் போற்று. 1

அரவம் புனைவான் அடைக்கலந் தருவான்
பரமன் மலரடித் தொழு. 2

எந்தை பெருமா னிறப்பிலிபி றப்பிலி
சிந்தை புகுந்தான் சிறந்து. 3

கற்றை சடையான் கறைதிகழ் கண்டன்தாள்
பற்றிடத் தக்கதே காண்.
4

நீளும் பிறப்பை நிறுத்து முரிமையன்
தாளைப் பரவுதல் பண்பு. 5

காலன் நிலம்படக் காலா லுதைத்தபிரான்
கோலக் குரைகழலைப் பற்று. 6

அங்கண னெந்தை அருமறை தந்தபிரான்
தங்கத் திருவடி யேத்து. 7

குறள்தாழிசை திருச்சிற்றம்பலம்

கோணல் பிறையன் குரைகழல் சிலம்பன்
வேணு புரத்தன் விரையடி நிழலே. 1

அட்ட குணத்தன் அவிர்சடை அண்ணல்
நட்டம் பயில்வான் நற்றாள் நிழலே. 2

பாகம் பெண்ணான் பரிசன மில்லான்
நாகம் புனைவான் நற்றாள் நிழலே. 3

ஆலமர்ச் செல்வன் அறம்பொருள் சொன்னான்
கோலக் குழகன் குரைகழல் நிழலே. 4

நீல கண்டன் நிருத்தன் நல்லன்
வேலவன் தாதை விரைமலர் நிழலே 5

கங்கைச் சடையான் கண்மூன் றுடையான்
எங்கள் பெருமான் இணையடி நிழலே. 6

கொன்றைத் தாரன் குனித்தப் புருவன்
மன்றில் நடனன் மலரடி நிழலே. 7

சூலப் படையான் சுடர்விடு சோதி
காலனைக் காய்ந்தனன் கழலடி நிழலே . 8

வேத வாயான் விரிசடைக் கடவுள்

பாத பங்கயம் பதமலர் நிழலே. 9

நீறு பூசும் நிமலன் சடையில்
ஆறு திகழும் அலரடி நிழலே. 10

## சிந்தியல் வெண்பா

## திருச்சிற்றம்பலம்

உன்னப் புகுந்தேன் உமையொரு பாகனின்
மன்னுஞ் சிலம்படி மாற்றுமே செய்வினை
இன்னும் எதற்கோ பிறப்பு. 1

ற்கிந்த மண்பிறந்தேன் எண்ணிலேன் இன்னும்
குதர்க்கமேப் பேசித் திரிகின்றேன் பெம்மான்
சதங்கை யொலிகேட்ப தென்று . 2

என்று முடிவுறுமோ ஏழையேன் வாழ்க்கையிது
சென்று உறைவிடம் காணேன் சிவபிரான்
அன்றால் உரைகேளா நெஞ்சு. 3

நெஞ்சே நினையாயோ நீள்பிறப்பின் துன்பங்கள்
அஞ்சிவாழ் வாழ்வை அறுத்திடுவான் அம்பலவன்
தஞ்ச மவனடியே கேள். 4

கேளாயோ நெஞ்சுனக்கு கேடினி வாராதோ
ஆளாவாய் இன்றே அரனடிக்கே அன்புசெய்தே
நீளும் பிறப்பை நீக்கு . 5

நீக்கும் பொருளதனை நெஞ்சே நினைந்திடுவாய்
போக்கத் துணிந்தாயோ புற்றரவம் பூண்டானை
ஏக்கம் நிறைவேற ஏத்து. 6

ஏத்துவாய் நெஞ்சே இறப்பில்லா தேவனே
காத்திடுவான் நம்மை கண்ணுதலான் பொன்னடியே
பூத்திகழும் பொய்கையெனக் காண். 7

காண்பாய் கரணங்கள் காயத்தைப் போக்கிடவே
பூண்பாய் சிவச்சின்னம் புண்ணியத்தின் நற்பயனால்
தேனார்ந்த பேரின்பம் தேடு. 8
தேடுந் திரவியங்கள் திக்கெட்டும் சென்றிடுமே
வாடும் நிலைவருமே வையகத்தில் வைகலும்
ஆடு மரனடியை வாழ்த்து. 9

வாழ்த்துவாய் நெஞ்சே வார்சடை அண்ணலையே
தாழ்த்தித் தலைவணங்கு தாமரை பொற்றாளே
வீழ்த்தா பிறப்பிறப்பை யுன்னு.
10

திருச்சிற்றம்பலம்

பஃறொடை வெண்பா
திருச்சிற்றம்பலம்

பிறப்பால் வருதுயரங் காணாயோ நெஞ்சே
இறப்பால் உறுபயனை எண்ணிப்பார் சற்றே
சிறப்பால் உயர்ந்திடுவாய் செய்கருமம் சிந்திக்(குந்)
திறத்தால் அரனடியே போற்றிசைப்பாய் ஆசை
துறப்பாய் துணையினைக் காண் . 1

என்றும் துணையாவான் ஏழையொரு பாகத்தன்
நன்றாலின் கீழமர்ந்து நான்மறைகள் வாய்மலர்ந்தான்
நின்றாடும் அம்பலத்தே நீண்டபெருந் தாள்காட்டி
வென்றார்க்கே வீடருளி வித்தின்றிச் செய்திடுவான்
சென்றவனின் சேவடிப் பற்று. 2

நீக்கிடுவாய் தீயகுணம் நின்றிடுவாய் பத்திநெறி

போக்கிடுவாய் பொல்லாஙகு பூசிடுவாய் வெண்நீறு
ஆக்கிடுவாய் நன்நெறிக்கே ஆதியிலான் அந்தமிலான்
சாக்கியர்க்கும் வாழ்வளித்தச் சங்கரனைப் போற்றிடுவாய்
தூக்கியப் பொற்றாள் துணை.
3

நித்தன் நிரந்தரன் நீங்காதான் நெஞ்சத்தே
சுத்தன் சுதந்திரன் சொல்லான் இரகசியத்தை
சித்தன் சிவலோகன் சீரார்ப் பெருந்துறையன்
பத்தர்க் கினியனவன் பைங்கழல் தேனமுதன்
கொத்தலர்ப் பூவாற் பரவு .
4

மலமில்லான் மான்மறியான் மந்திரங்கள் சொல்லிச்
சலமிலனாய் நிற்பானே சார்ந்திலான் சான்றோர்க்
குலமில்லான் கும்பிடான் கூற்றுவனைக் காலால்
நிலம்படவே செற்றபிரான் சேவடி போற்றி
வலம்வரவே நீங்கும் பிறப்பு . 5

மண்பிரியா நாற்றன் மறைபிரியா சீராளன்
கண்பிரியா நெற்றிக் கழல்பிரியா பொற்றாளன்
பெண்பிரியா பித்தன் பிறைபிரியா நீள்முடியன்
தண்பிரியாக் கைலைத் தழல்பிரியாப் மேனியனைப்
பண்பிரியாச் சொல்லாற் பரவு .
6

தத்துவம் ஆறாறைத் தன்னுணரக் தந்ததுவே
அத்தன் சிவபெருமான் ஆக்கியே காத்தருள்வான்
பத்தியும் நன்னெறிப் பண்போடு சீலத்தினால்
சித்தம் தெளிவுறுமே சிந்திக்கச் செய்திடுமே
முத்திக்கே வித்தாகும் முந்து. 7

சாத்திரம் பொய்யென்பார் சாதியும் பொய்யென்பார்
மாத்திரைப் போழ்தும் மனத்தூய்மை இல்லாதார்
ஆத்திரங் கொள்வார் அகம்பாவக் கொள்கையினர்
நாத்தழும்பாய் பொய்யுரைப்பார் கேளாதீர் நன்றியிலார்

பூத்திருக்கும் பூக்கொண்டு புள்ளிருக்கு வேளூரானை
ஏத்திடுவீர் இன்பம் உற்று. 8

நல்லார் இவரென நாலுபேர் சொன்னாலே
இல்லாதார் நாமில்லை என்றுணர்ந்து கொள்மினே
வில்லான் விசயர்க்கு பாசுபதம் ஈந்தநம்
கல்லால் அமர்ந்தபிரான் காட்டிய சொற்பதத்தை
எல்லோரும் கேட்க இயம்பு . 9

அற்றான் பிறப்பிறப்பு ஆறுதங்கு செஞ்சடையன்
பெற்றம் உகந்தேறும் பெம்மான் பெருந்துறையன்
கொற்றங் குடியார்க்(கு) கொடுத்தநல் சீட்டோலை
கற்றனையோ நீயுங் கழலடிக்கீழ் மன்னுதற்கு
சற்றேனும் கைகுவித்துப் போற்று. 10

**திருச்சிற்றம்பலம்**

## குறள் வெண்செந்துறை
## திருச்சிற்றம்பலம்

பெண்ணொரு பாகன் பிறப்பிலி தேவனின்
பொன்னார்த் திருவடி யேத்துமின் முத்தியதே 1

அங்கை அனலேந்தி ஆடுவான் அம்பலத்தே
திங்கள் சடையனின் சேவடி யேத்துமினே 2

காலனைக் காய்ந்தக் கறைமிடற் றண்ணலைச்
சீலத்தார் பரவுவார் சிந்தனைச் செய்மினே .
3

செற்றார்ப் புரங்கள் செற்றச் சிவன்கழலைப்
பற்றுவார் பற்றற்றார் பண்பாற் தொழுமினே.
4

அருமறை வாயான் அரவணியும் பெம்மான்

தருவது முத்தித் தனித்தாள் பரவுமினே .    5

வரைச்சிலை யேந்திப் புரமூன் றெரித்தான்
திரைநிறைக் கங்கை முடித்தான் தொழுமினே.    6

மண்முதற் பூதம் வெளிப்படச் செய்தோனின்
தண்மலர்த் தாளைப் பரவித் தொழுமினே.    7

திண்சிலை யேந்தும் திகம்பரன் நம்மிறை
எண்தோளன் முக்கண் திருத்தாள் தொழுமினே.    8

பெண்ணொரு பாகன் பிறப்பிலி பிஞ்ஞகன்
மண்தோன்றச் செய்தான் மலர்த்தாள் தொழுமினே.    9

கண்காணிக் காணா இடமில்லை காலத்தின்
முன்தோன்றி மூத்தோன் திருத்தாள் தொழுமினே.    10

திருச்சிற்றம்பலம்

குறள்வெண்செந்துறை

மண்ணில் பெருமை மறுமை காணுதல்
எண்ணித் தொழுவாய் இறைவ னடியே    1

ஆற்றுக அறமே அன்பினால் உலகைப்
போற்றுக புனிதன் பொன்னடித் துணையே.    2

அறிந்தும் தீதை ஆற்றிடத் துணிந்தால்
வருந்தும் பிறப்பை வழங்குவ னிறையே.    3

பெண்மை ஆண்மைப் பெருமை பேசாய்
உண்மை உணர்வாய் உற்றார் சிவனே.    4

இருவினைப் பாசம் இல்லா நிலையே
உருவம் மாற்றும் உய்வினைத் தருமே.    5

கோணல் பிறையன் குளிர்புன் சடையன்

வேணு புரத்தான் விரைதாள் பணிமினே. 6

வீரக் கழலோன் விரிகோ வனத்தன
ஆரா அமுதன் அடிமலர் வீடே. 7

அட்டவீ ரெட்டன் அவிர்சடை யண்ணல்
இட்ட ஆணை இயற்றுவர் தேவரே. 8

முப்புரஞ் செற்றார் முழுமுதற் கடவுள்
அப்புற மதிசயம் அறிவாய்க் காவலே . 9

காலனை உதைத்தக் காரணம் காண்பாய்
பாலனின் பத்திப் பரிசது காணே.
10

நீரும் நெருப்பும் நீண்ட கரத்தினன்
சீரும் சிறப்பும் செப்புக நன்றே.
11

ஆடுவான் பாடுவான் அம்பலக் கூத்தன்
கூடடுவார் குறிப்பைக் கூட்டுவான் நன்றே. 12

வேதத் திருவாயன் விடையேறு வேந்தன்
பாதம் பற்றுவார் பாவ மறுப்பானே.
13

புலித்தோல் பூண்டப் புரிசடைக் கடவுள்
கலியின் கொடுமை களைவா னெளிதே. 14

யானைத்தோல் போர்த்தான் எருதேறி வருவான்
வானையும் மண்ணையும் வழங்கினான் கருணையே 15

எட்டு குணத்தான் ஏழைப் பங்காளன்
நட்டம் பயில்வான் நமக்கெலாம் நாதனே. 16

கங்கைச் சடையான் கண்மூன்று முகத்தான்

எங்கும் நிறைந்தானை ஏத்தி மகிழ்வாயே. 17

நீல கண்டன் நெற்றிக் கண்ணன்
கோலத் திருவடிக் கோதாட்டக் காணே 18

சூலப் படையான் சுடர்விடு சோதியான்
காலன் வாராக் காப்பான் பேணே.
19

நூல்திகழ் மார்பன் நூபுரப் பாதன்
ஆல்நிழல் அமர்ந்து அறமுரைத் தானே. 20

மண்ணில் பெருமை மறுமை காணுதல்
எண்ணித் தொழுவாய் இறைவ னடியே 21

ஆற்றுக அறமே அன்பினால் உலகைப்
போற்றுக புனிதன் பொன்னடித் துணையே.
22

அறிந்தும் தீதை ஆற்றிடத் துணிந்தால்
வருந்தும் பிறப்பை வழங்குவ னிறையே. 23

பெண்மை ஆண்மைப் பெருமை பேசாய்
உண்மை உணர்வாய் உற்றார் சிவனே. 24

இருவினைப் பாசம் இல்லா நிலையே
உருவம் மாற்றும் உய்வினைத் தருமே. 25

எண்ணுக நெஞ்சே இறப்பும் பிறப்பும்
திண்ணம் நாம்செய் திருந்தா நிலையே. 26

மலங்கள் மூன்றும் மறுமையின் வித்து
நலங்கள் தாரா நன்னெறி பற்றே. 27

காணும் பொருட்கள் காலத்தால் அழியும்
பேணும் நன்னெறிப் பேரின்பம் தருமே. 28

அநாதிப் பொருளை அறிவாய் நெஞ்சே
குணாதி இல்லாக் கூத்தனை ஏத்தே. 29

கொல்லா நோன்பைக் கொள்வாய் நெஞ்சே
செல்லாய் நரகு சேர்வாய் சிவபுரமே. 30

நேரிசை வெண்பா
திருச்சிற்றம்பலம்

பற்றற்றான் எந்தைப் பரம்பரன் பேர்நந்தி
புற்றரவு பூண்டான் புவிவிளங்க ---- நற்றவத்தான்
ஆற்றும் தொழிலைந்தை ஆய்ந்ததன் காரணத்தால்
போற்றினேன் பொற்றாள் தெளிந்து.
1

தெளிந்திடவே வாயுரைத்தார் நால்வேத மங்கம்
அளித்தனன் ஆகமம் அண்ணல் --- களிப்புற்றேன்
பத்தி நெறிபற்றி பாமாலைச் சீர்பாடி
முத்திக்கே வித்தானேன் இன்று 2

**இன்றென்னை ஆண்டானின் ஈடில்லாப் பொன்னடிச்**
**சென்றென்னைச் சேர்க்குஞ் சிவபதமே -- வென்றேன்**
**வினையிரண்டும் வீடுமே விண்ணோர் பெருமான்**
**இணைதாள் துணையாகக் கொள்.** 3

என்னுள் கலந்தபிரான் என்றும் பிரியாதான்
கன்னல் கரும்பானான் கண்ணுதலான் --- முன்னம்செய்
நற்றவத்தால் நாதன் திருவருளால் இன்றெனக்கு
பற்றிடத் தந்தனன்பா தம் . 4

தெளிவாய் கபடநெஞ்சே தீந்தமிழ்ப் பாட்டு
புளிப்பென எண்ணாதே போற்றிக் -- களிப்புற்றோர்
எண்ணிறைந்தக் கோடி இறையோன் சிவக்கழலை
நண்ணி நலம்பெற்றார் வீடு . 5

பிறப்பால் வருந்துயரம் பேசினர் நான்காய்
மறப்பார்க்கே உண்டுப் பிறப்பு -- திறப்பாய்
ஞானக்கண் ஒன்றுண்டு ஞானியர் பாற்சென்றால்
நானென்றச் சொல்கெடும் பார். 6

நித்தப் பொருள்மூன்றில் நீயும் ஒருவனே
பித்தம் தெளிய மருந்துண்டு -- முத்தியை
நாடுவாய் நன்நெஞ்சே நம்பன் சிவக்கழலே
வாடும் நிலைமாற்றும் வாழ்த்து . 7

இறக்குநாள் என்றென நாமறியோம் உலகில்
பிறக்குநாள் உண்டெனப் பேசோம் ---- சிறக்கும்
வழிகேள் சிவனடியே சிந்திப்பாய் நாளும்
பழியில்லை பாறும் பிறப்பு . 8

கண்டாயோப் பேரின்பம் காட்டுவார் சித்தாந்தி
கண்டம் கறுத்தபிரான் கண்ணுதலான் - தொண்டர்க்கே
ஈவான் தொடரும் பிறப்பறுத்து முத்தியதால்
தேவதேவனை யேத்துவாய் இன்று . 9

தன்னை உணராதார் தத்துவத்தை காணாதார்
முன்னைப் பழம்பொருளை யேத்தாரே ---- பின்னைப்
பிறப்பதனில் பெம்மான் திருவருளாற் நம்போற்
சிறப்பாரே சேவடிப் பற்று.
10

**திருச்சிற்றம்பலம்**

வஞ்சித் துறை
******************
**திருச்சிற்றம்பலம்**

கங்கைச் சடையோனே
திங்கள் முடியோனே
அங்கை அனலோனே

எங்கள் பிறப்பறுப்பாய். 1

கற்றைச் சடையானே
பெற்றம் உகந்தோனே
முற்றும் உணர்ந்தோனே
உற்ற உயிர்த்துணையே 2

**அறிவாயோ முப்பொருளை**
**தெரிவாயோ அப்பொருளில்**
**புரிவாயொ உன்னிலையை**
**விரிவாயோ விளம்புகவே** 3

வஞ்சி விருத்தம்
**********************
**திருச்சிற்றம்பலம்**

கங்கைச் சடையோனே கண்ணுதலோய்
திங்கள் முடியோனே பெண்காகா
அங்கை அனலோனே ஆதிரையா
எங்கள் பிறப்பறுப்பாய் யெம்மானே. 1

கற்றைச் சடையானே கண்ணுதலா
பெற்றம் உகந்தோனே பிஞ்ஞகனே
முற்றும் உணர்ந்தோனே முழுமுதலே
உற்ற உயிர்த்துணையே தாள்தருவாயே 2

ஆறுடையான் சென்னி அவிர்சடையான்
நீறுடையான் நெற்றிக் கண்ணுடையான்
ஏறுடையான் ஏழை பங்குடையான்
சீருடையான் செல்வக் கழலானே 3

நன்றுடையான் நம்மை ஆளுடையான்
குன்றுடையான் கூடல் மாநகரான்
ஒன்றுடையான் ஊர்திக் கொடியுடையான்
வென்றுடையான் விடைமேல் அமர்வானே. 4

நெருப்புடையான் நெற்றிக் கண்ணுடையான்
பொருப்புடையான் பூதப் படையுடையான்
கருப்புடையான் கண்டம் நஞ்சுடையான்
விருப்புடையான் வேண்டல் முடிப்பானே.
5

பீடுடையான் பெண்ணோர் பங்குடையான்
காடுடையான் கற்றைச் சடையுடையான்
தோடுடையான் காதில் துணிவுடையான்
நாடுடையான் நம்மின் வாழ்விடமே 6

வரையுடையான் வற்றா நதியுடையான்
பிறையுடையான் பேணும் திருவுடையான்
நிறையுடையான் நெற்றிக் கண்ணுடையான்
முறையுடையான் முத்தித் தருவானே. 7

பெண்ணுடையான் பெய்யும் அருளுடையான்
கண்ணுடையான் கயிலை மலையுடையான்
மண்ணுடையான் மாயைப் பொருடையான்
விண்ணுடையான் வேதப் பொருளானே . 8
பண்ணுடையான் பாடல் பலவுடையான்
தண்ணுடையான் தனலின் எரியுடையான்
திண்ணுடையான் தீயார் புரஞ்செற்றான்
கண்ணுடையான் கருத்தை முடிப்பானே. 9

நீருடையான் நெருப்பாய் நிமிர்ந்தானை
காருடையான் கயிலை மலையானை
பாருடையான் பெற்றம் உகப்பானை
பேருடையான் பிறப்பை அறுப்பானே. 10

வடிவுடையான் உருவம் மூன்றானை
பொடியுடையான் புன்மை தவிர்ப்பானை
அடியுடையான் ஆனைப் காவுடையான்
படிவுடையான் பாதம் பணிவோமே . 11

எரியுடையான் ஏவல் படையுடையான்
விரிவுடையான் வெற்றிக் கொடியுடையான்
செறிவுடையான் செல்வத் திறலுயுடையான்
பரிவுடையான் பாதம் பணிவோமே 12

சந்திரனை முடிமேல் சூடினானை
இந்திரன் வழிபட ஏற்றானை
மந்திர மாமறை வழங்கினானை
எந்திரம் சமைத்து ஏத்துவாயே. 13

ஆறாறு தத்துவங்கள் ஆக்கினானை
தீராதப் பிறவிதனைத் தீர்ப்பானை
காருலவும் கயிலைவரை அமர்ந்தானை
நீறணிந்த நெற்றினாய் ஏத்துவாயே . 14

பூதங்க ளைந்தாய் நின்றானை
வேதங்கள் நான்கை விரித்தானை
போதங்கள் மூன்றைச் சொல்வானின
பாதங்க ளிரண்டைப்.பற்றுதியே. 15

கொன்றையும் மத்தமும் சூடிடுவான்
கன்றையும் .கனலையுங் கரங்கொள்வான்
நன்றையும் தீதையும் நமக்குரைத்தான்
குன்றன்னப் பாதம் தொழுவோமே. 16

கானகப் புலியுரி ஆடையினான்
வானகத் தேவரை வாழ்வித்தான்
ஊனகம் கோயிலாய் அமர்ந்திடுவான்
தேனகச் சேவடி ஏத்துவோமே. 18

குருவென்பார் சிவஞானங் கற்றாரே
குருவென்பார் சிந்தைத் தெளிவிப்பார்
குருவென்பார் சோதிப்பார் பலவழியில்
குருவென்பார் பொருளாசை யற்றாரே 19

குருவென்பார் குணமெலாம் கூட்டுவிப்பார்

குருவென்பார் தத்துவங் காட்டுவிப்பார்
குருவென்பார் முப்பொருளை காட்டுவிப்பார்
குருவென்பார் கிடைப்பதற்கு அறிதாமே. 20

**திருச்சிற்றம்பலம்**

கலியோத்தாழிசை
**திருச்சிற்றம்பலம்**

கோணல் பிறையணியுங் கோமான் பிறப்பிலியான்
ஆணாகி வந்தென்னை ஆட்கொண்டான் பொற்றாள்
தொழப்பெற்றேன் நாயேன் .
1

கங்கைச் சடையுடையான் கண்மூன்று முகமுடையான்
மங்கையும் தானுமாய் ஆட்கொண்டான் பொற்றாள்
தொழப்பெற்றேன் நாயேன்.
2

கொன்றையும் மத்தமும் கூறிடைப் பெண்ணுமாய்
நின்றவன் வந்தென்னை ஆட்கொண்டான் பொற்றாள்
தொழப்பெற்றேன் நாயேன்.
3

கலி விருத்தம்
*****************
கங்கைச் சடையோனே கண்ணுதலோய் சூலபாணி
திங்கள் முடியோனே பெண்காகா வெண்நீற்றாய்
அங்கை அனலோனே ஆதிரையா ஆரூரா
எங்கள் பிறப்பறுப்பாய் யெம்மானே வீடருள்வாய் 1

அஞ்செழுத்தில் ஓரெழுத்துள் அடங்கினேன் நாயேன்
தஞ்சமெனச் சொல்லிடவே தயங்கினேன் இன்றும்
கொஞ்சிவிளை யாடிடவே கூடினேன் பாசம்

கெஞ்சுநிலை ஆளானேன் கீழ்மையாம் பிறப்பு 2

சிவபுரக்கோ செல்வனருள் சேர்ந்தத னாலே
பவபுரமாம் புவியிடையே படுதுயர் அந்தாதி
தவநிலையை உலகறியச் செய்தவன் தாளை
அபயமேன அஞ்சலித்தேன் அவனடி சேர்ந்தே. 3

கலித்தாழிசை திருச்சிற்றம்பலம்

******************
கங்கைச் சடையோனே கண்ணுதலோய் சூலபாணி
திங்கள் முடியோனே பெண்காகா வெண்நீற்றாய்
அங்கை அனலோனே ஆதிரையா ஆரூரா
எங்கள் பிறப்பறுப்பாய் யெம்மானே வீடருள்வாய்
---- என்றும் உமக்கடிமை யெம்மானே வீடருள்வாய். 1

கொல்லாக் குணமுடையான் குன்றென நின்றிடுவான்
எல்லா உயிர்கலந்தான் என்னையும் ஆளுடையான் .
வல்லான் வளைசிலையான் வற்றா நதியுடையான்
இல்லா இடமில்லான் பொற்கழல் ஏத்துவனே
---- ஈறிலாப் பீடுடையான் பொற்கழல் ஏத்துவனே . 2

சீலம் மிகவுடையான் செல்வன் சிவபுரத்தான்
காலன் நிலம்படவே காலால் உதைத்தபிரான்
ஞாலம் நிலைபெறவே நாளும் படியளப்பான்
கோலக் குடுமியனின் பொற்கழல் ஏத்துவனே
----- ஆரூர் அமர்ந்தானின் பொற்கழல் ஏத்துவனே 3

பின்னல் சடைமுடியான் புஞ்ஞுகப் பேருடையான்
கன்னல் கரும்பாவான் கார்குழல் பெண்பாகன்
சொன்னான் மறைநான்கைச் சோதியாய் நின்றானை
அண்ணா மலையானின் பொற்கழல் ஏத்துவனே
------ ஆயிரம் பேருடையான் பொற்கழல் ஏத்துவனே. 4

அட்டக் குணத்தானே ஆதிரை நன்னாளில்

நட்டம் பயில்வானை நாரிவோர் பானை
இட்டம் மிகவோடு ஏத்திப் பணிவாரை
சிட்டன் சிவலோகன் சேவடிக்கீழ் வைப்பானே
---- செந்தா மலரென்னும் சேவடிக்கீழ் வைப்பானே . 5

ஆனை உரித்தபிரான் அத்தோலை போர்த்திடுவான்
பானை வயிறோனை பார்மகிழத் தந்தபிரான்
ஊனை உடல்நீக்கும் உத்தமனே பெண்பாகன்
தேனைக் தந்தருளும் சேவடிக்கீழ் வைப்பானே
--- திக்கெட்டும் திகழ்வான்தன் சேவடிக்கீழ்
வைப்பானே.6

வெற்றிக் கொடியுடையான் வேதத் திருநாவன்
கொற்றக் குதிரையின்மேல் சேவகனாய் வந்தானை
பற்றுவார் பாவங்கள் தீர்தருளும் சேவகனை
சிற்சபையா என்பேனே சேவடிக்கீழ் வைப்பானே ---
சிவலோகன் என்தன்னைச் சேவடிக்கீழ் வைப்பானே. 7

ஆடுவா னெம்மண்ணல் அம்பலத்தே நின்றாடிப்
பாடுவான் முத்தமிழைப் பண்ணோடு நாள்தோறும்
கூடுவான் எண்குணத்தான் குற்றமிலா நல்லாரைத்
தேடுவான் பொற்பாதம் பென்தலைமேல் வைப்பானே
- தெகிட்டாத பொற்பாதம் யென்தலைமேல்
வைப்பானே.8

வற்றாத கங்கையளை வார்சடையில் வைத்தபிரான்
முற்றாத வெண்நிலவை மூவாமே காக்கு
எற்றைகும் மூவானை ஏனோர்க்கும் பசுபதியான்
பற்றாகப் பாதமலர் யென்தலைமேல் வைப்பானே
-பண்ணொலிப் பாதமலர் யென்தலைமேல் வைப்பானே.9

ஆற்றலுடை வெள்விடையான் ஆவின்பால் ஐந்துகப்பான்
நாற்றமிகு கொன்றையந்தார் நாடோறும் தோளேற்றான்
ஏற்றமிகு பீடுடையான் ஏடுடைய நான்மறையான்
தேற்றமிகு பொற்பாதம் யென்தலைமேல் வைப்பானே

- தேன்சொரியும் பொற்றாளை யென்தலைமேல் வைப்பானே.10

ஆசிரியப்பா

**திருச்சிற்றம்பலம்**

பூத மைந்தாற் பொதிந்தப் புவியில்
மாதங் கிழமை மாத்திரை யென்றே
காலக் கணக்கீடுக் காட்டிய முன்னோர்
சீலம் இவையெனச் செப்பினர் நமக்காய்
கொன்றை வேந்தன் கோவை வாசகம்
என்றே இலக்கிய இலக்கணம் காட்டின
ரதனைக் காண்பது அறிவே. 1

வானும் நிலனும் வளியும் தீயும்
தானேத் தோன்றின தில்லை கண்க
ளறியாக் கருணைக் கடவுள் எண்ணிலி
உயிரின் பொருட்டாய் தோற்றியுங் காத்துமாய்
ஆற்றுந் தொழிலைந்து
அழுதும் நீங்கா அல்லற் பிறப்பை
தொழுதுப் போக்கிடத் துணிவோம் நன்றே. 2

பண்பைப் பேணிடும் பழந்தமிழ் நிலத்தில்
நண்பா நாமும் நல்லறம் இயற்றி
இன்பம் காண்போம் இல்லறம் சிறக்க
அன்பே ஆயுதம் அதனை ஏந்தி
துன்பம் நீக்கிடத் துணிவோம்
நன்றே கொள்கை நட்டைக் காக்குமே. 3

**திருச்சிற்றம்பலம்**

நிற்பனவும் நடப்பனவும் படைத்தானை நிலவுலகில்
கற்பனவும் காண்பவும் காட்டியப் பெருமானை

முற்பகலும் பிற்பகலும் முடிப்பானை முயன்றார்க்கு
நற்பரிசுத் தருவானை நன்றியுற தொழுநெஞ்சே .
1

தருவானைத் தந்தவுடல் காப்பானை தரணியெங்கும்
வருவானைப் போவானை வானுலகத் தேவரையும்
கருவாகப் படைப்பானை கற்பனைக் கெட்டாதத்
திருவானைத் தித்திக்கும் நன்மருந்தைத் தொழுநெஞ்சே2

உண்ணானை உறங்கானை ஊழிபல சமைத்தானை
பெண்ணானை ஆணானை பிறப்பொன்று மில்லானை
கண்ணானைக் கருத்தானை காரிகையாள் பானை
அண்ணா மலையென்று அரற்றித் தொழுநெஞ்சே .    3

மலையானைக் கடலானை மன்மதனை எரித்தானை
கலையானைக் கற்பகத்தை கண்மூன்று உடையானை
நிலையானை நீள்விசும்பை நிருத்தம் பயில்வானை
வலைப்படா நிற்பவே வாழ்த்திப் பணிநெஞ்சே.    4

தித்திக்கும் நல்மருந்தைத் தேசமெல்லாம் திகழ்மருந்தை
பத்திக்குள் வரும்மருந்தைப் பலபேரும் புகழ்மருந்தை
அத்தனெனப் பேர்மருந்தை ஆதிரையில் வரும்மருந்தை
மத்தமலர் முடியானை மாண்புடனே தொழுநெஞ்சே.
5

மாண்புடையப் பெரியானை மான்மழுகைப்
படையானை
ஆண்மகவாய் திகழ்வானை அரக்கர்களை அழித்தானை
பாண்மையுறச் செய்வானை பத்திவலைப் படுவானைக்
காண்பாயே நெஞ்சேநீ ஆதிசிவன் திருவருளே .
6

தேனினும் இனியனை தெகிட்டாத அமுதனை
வானினும் பெரியனை வளியினுள் ஒளியனை
ஆணினில் அழகனை அன்பினில் உருவனை
நானெனுஞ் செருக்கிலா நம்மானை யேத்துமினே .    7

மழுப்படைக் கரத்தனை மங்கையோர் பாகனை
செழுநீர்ச் சடையனை சிற்றம்பலக் கூத்தனை
பழுதிலா நல்லனை பசுபதி ஈசனை
தொழுதெழ எண்ணுமின் தொல்லைப் பிறப்பறுமே. 8

உள்ளங் கலந்ததுவை ஊரெல்லாம் பேரதுவை
கள்ளம் இல்லதுவை காலனை உதைத்ததுவை
வெள்ளம் சடையதுவை வெள்ளெருக்கு அணிவதுவை
தெள்ளத் தெளிந்ததுவை தினந்தோறும் வணங்குதியே.
9

முப்புரஞ் செற்றதுவை முக்கண் உடையதுவை
செப்ப இனியதுவை சேவடித் தருவதுவை
அப்பன் இல்லதுவை அறமாய் திகழ்வதுவை
எப்போதும் உள்ளதுவை ஏத்தி மகிழ்வாயே. 10

( வெண்பா) அளவடி வெளிவிருத்தம் **திருச்சிற்றம்பலம்**

---------------------------------------------------------

உண்டு உயிர்வாழும் உன்நிலைதாம் நன்னிலையோ --
நன்நெஞ்சே
பண்டு வினைப்பரிசைப் பார்த்தனையோ இவ்வுலகில் ---
நன்நெஞ்சே
கண்டுத் திருந்திடவே காசினியில் நீபிறந்தாய் ---
நன்நெஞ்சே
தொண்டு உழவாரம் தூயோனைத் தொழிதிடுவாய் ---
நன்நெஞ்சே . 1

எத்தனை யெத்தனை பல்லுயிர்கள் யெண்ணிப்பார் ---
நன்நெஞ்சே
சித்தரும் பத்தரும் சேவிப்பார் காரணங்கேள் ---
நன்நெஞ்சே
உத்தமரும் பத்தினியும் உன்னுகின்ற நற்கரும்பை ----
நன்நெஞ்சே

எத்திசையும் போற்றிசைபாய் ஏழையோர் பாகனையே -
நன்நெஞ்சே. 2

ஊருண்டு பேருண்டு உத்தமனாய் வாழ்ந்தாயோ --
நன்நெஞ்சே
நீருண்டு தீயுண்டு நீள்பிறப்பைக் கண்டாயோ ---
நன்நெஞ்சே
சீருண்டு பாருண்டு சேர்ந்தனையோ நன்னெறியில் ---
நன்நெஞ்சே
யாருண்டு உன்துணைக்கு எண்ணிப்பார் ஆதிரையான் --
நன்நெஞ்சே . 3

சித்தந் தெளிந்தாயோ செந்நெறிதாங் கற்றாயோ ---
நன்நெஞ்சே
பித்தந் தெளிந்தாயோ பிஞ்ஞகனைக் கண்டாயோ ---
நன்நெஞ்சே
சுத்தநிலைப் பெற்றாயோ சோதியெனக் கொண்டாயோ
-நன்நெஞ்சே
அத்தன் அடிநிழலைச் சேர்ந்திடநீ எண்ணினையோ ---
நன்நெஞ்சே . 4

உண்டு இறையென் றுணர்ந்தனையோ இன்பதுன்பம் --
நன்நெஞ்சே
பண்டு வினைப்பரிசைக் கண்டனையோ நன்னெறியில் -
நன்நெஞ்சே
தொண்டு உழவாரஞ் செய்தனையோ தூயோனை ---
நன்நெஞ்சே
கண்டு கரங்குவியப் பெற்றாயோ காசினியில் ---
நன்நெஞ்சே . 5

பூதங்க ளைந்தினையும் போற்றினையே பூவுலகில் ----
நன்நெஞ்சே
வேதங்கள் நான்கினையும் விற்பனர்வாய்
கேட்டனையோ --நன்நெஞ்சே

போதங்கள் மூன்றையுமே பெற்றனையோ புன்சடையார் -நன்நெஞ்சே
பாதங் களிரண்டைப் பற்றினையோ முத்திக்கே ---- நன்நெஞ்சே. 6

முப்பொருளை ஆய்ந்தனையோ முக்கண்ணன் தன்கருணை ---- நன்நெஞ்சே
அப்பொருளில் நீயாரோ அஞ்சாமல் சொல்வாயே --- நன்நெஞ்சே
இப்பிறப்பில் பட்டதுய ரெண்ணினையோ யென்றென்றும் --- நன்நெஞ்சே
அப்பன் சடையப்பன் சேவடியைப் பற்றுவயே ---- நன்நெஞ்சே. 7

நல்லானைக்கண்டனையோ நற்றுணையைப் பெற்றனையோ --- நன்நெஞ்சே
சொல்லானை சோர்வில்லா நம்சிவனைச் சோதியினை - நன்நெஞ்சே
வல்லோனை வான்கயிலை நாடானை மூர்த்தியை --- நன்நெஞ்சே
செல்லாப் பிறப்பறுக்கச் சேவடியைச் சேவிப்பாய் ---- நன்நெஞ்சே . 8

தத்துவத்தைக் கற்றனையோ தானென்னும் நீக்கினையோ --நன்நெஞ்சே
புத்தியினை நன்னெறியில் போகிடச் செய்தனையோ --- நன்நெஞ்சே
சித்திக ளெட்டையும் பெற்றனையோச் சீருடையான் --- நன்நெஞ்சே
அத்தியின்தோல் போர்த்தானை ஆதரிக்க வேண்டுதியே -- நன்நெஞ்சே. 9

கண்ணின் பயனறிந்துக் காரியங்கள் செய்தனையோ --- நன்நெஞ்சே

மண்ணின் பெருமையினை மாண்புறநீ நின்றாயோ ---
நன்நெஞ்சே
எண்ணினையோ நன்னெறியை ஏற்றனையோ
என்றென்றும் --- நன்நெஞ்சே
அண்ணல் இணையடியே ஆதரிக்கப் போற்றுதியே ---
நன்நெஞ்சே . 10

வஞ்சி விருத்தம்  திருச்சிற்றம்பலம்

கற்றைச் சடையானே கண்ணுதலா
பெற்றம் உகந்தோனே பிஞ்ஞகனே
முற்றும் உணர்ந்தோனே முழுமுதலே
உற்ற உயிர்த்துணையே தாள்தருவாயே

பிறப்பின்பயனைஅறிந்தாயோ
இறப்பின் வலிமை தெரிந்தாயோ
அறப்பை நிறைத்தல் உயர்தவமே
சிறப்போ சிவனை வணங்குதலே

திருச்சிற்றம்பலம்

மா மா  மா  மா   மா மா

ஒலியாற் படைப்பன் உலகை
உடுக்கை அதனின் நாமம்
கலியால் அழியும் நாடு
கையில் கொண்ட எரியே
பழியார் வாழக் காப்பன்
பண்பன் அபய கரத்தன்
இழியா இன்பந் தருவன்
ஈசன் காட்டும் பாதம்.

**அறுசீர் விருத்தம் சதகம் மா மா காய் மா மா காய்**
**திருச்சிற்றம்பலம்**

அத்தா வுந்தன் அருளதனை
அறிந்தும் மறந்தேன் கீழ்மையினன்
செத்துப் பிறக்கும் செயலறிந்தும்
செய்யாக் கெட்டேன் சிவப்பணிகள்
முத்தே மணியே முதுகுன்றா
மூவா மருந்தே எனையாண்டச்
சித்தே தில்லை அம்பலவா
சிறியேன் பிறவி அறுப்பாயே. 1

உள்ளும் புறமும் தூய்மையிலை
உறங்கிக் கழித்தேன் பலகாலம்
வெள்ளை நிறத்துத் திருநீற்றை
விரும்பிப் பூசி மகிழ்வடையேன்
துள்ளும் மானைப் பிடித்தோனே
தூயா துணையாய் வருவோனே
வள்ளல் உன்தாள் வணங்கிடுவன்
வறியேன் பிறப்பை அறுப்பாயே. 2

வஞ்ச நெஞ்ச அழுக்குடையார்
வாழும் புவியை அறியாயோ
கொஞ்சித் திரிவார் அவருள்ளும்
கொடுமைக் குணத்தைக் காணாயோ
தஞ்சம் கேட்பார் பின்னாளில்
தனக்கே சொந்த ஆக்கிடுவார்
அஞ்சைக் களத்து அப்பனுக்கே
ஆளாய் ஆவாய் பிறப்பறவே. 3

யாண்டு முள்ளப் முப்பொருளை
எளிதிற் காண முற்படுங்கால்
காண்டற் கருதல் ஆகமமாய்க்

காட்டக் காண்பாய்க் காசினியிற்
வேண்டிக் கேண்மின் விருப்போடு
விண்ணோர் மண்ணோ அறியாத
ஆண்டான் ஒருவன் உயிர்குலமும்
அழியாப் பாசப் பொருளதுவே.
4

இருளாம் பொருளை ஆணவத்தை
இன்றே அடக்க முயன்றிடுமின்
அருளாம் கருணைத் திறமுடையான்
அத்தன் நம்மை ஆளுடையான்
தெருளாம் திறத்தைப் பெற்றிடவே
திருந்தக் காட்டும் ஆகமங்கள்
பொருளாய்த் தந்தான் புண்ணியத்தான்
போற்றிப் பணிமின் பிறப்பறவே. 5

முதலாம் வார்த்தைத் தந்துதவும்
முக்கண் னப்பன் பரஞ்சோதி
இதமா மின்பந் தருவதற்கே
இன்னல் முன்னம் தந்திடுவான்
பதமாம் முத்தி நெறிகாட்டும்
பரமன் பத்தி நெறிகாட்டி
மதமாம் மடமை நீக்கிடுவான்
மலர்த்தாள் தொழுவோம் பிறப்பறவே. 6

மூடாக் கண்ணான் முகமைந்தான்
முன்னும் பின்னும் பிறப்பில்லான்
வாட மலரை வைத்துகப்பான்
வளமும் நலமும் தந்தருள்வான்
ஓடா னுறங்கான் ஓய்வில்லான்
உண்மை பேசுந் திருவாயன்
கூடா நட்பு கொள்ளாதான்
கோமான் பொற்றாள் பற்றுமினே. 7

சாவார் நிலையை எண்ணுகவே
சடுதிப் பொழுதில் விபத்தாகிப்

போவார்த் துயரம் ஆயாதார்ப்
        புன்மை வழியில் பொருள்சேர்த்து
நாவாற் பேசும் நன்னெறியை
        நடத்திக் காட்டு திறமையதால்
நோவார் மக்கள் அரனடியைத்
        தொழுவீர் பெறுவோம் பிறவாமை..    8

கள்ளங் கபடங் கொண்டோம்நாம
        கவலை மறந்துத் திரிகின்றோம்
தெள்ளத் தெளிந்தார் சொல்கேட்டு
        திருந்த கில்லோம் வினைவசத்தால்
வெள்ளந் தங்கு விரிசடையான்
        விமல னருளாற் பிறப்புணர்ந்தோம்
வள்ளல் சிவன்தன் திருத்தாளை
        வணங்கிப் பெறுவோம் பிறவாமை.    9

உடலின் வேறா முயிர்கண்டு
        உலகின் வேறா மிறைகண்டு
கடலின் பெரிதாம் பிறப்புணர்ந்து
        கவலை மிகவால் நெக்குருகி
படவின் னரவம் புனைந்தானை
        பத்தி வலையிற் படவைத்து
முடவந் தவிர்போம் முத்திநெறி
        முயன்று பெறுவோம் பிறவாமை.    10

**விளம் மா  மா விளம்  மா மா திருச்சிற்றம்பலம்**

ஆதியாய் உலகம் யாவும்
        ஆக்கியே காத்தும் யென்றும்
நீதியாய் நிலையாய்  மன்னும்
        நிருத்தனே அருத்தம் காட்டும்
சோதியாய் தோற்ற மில்லான்
        சுடர்மிகு மழுவாட் படையான்
பாதியாய் பெண்ணைக் கொண்டான்
        பசுபதி யெந்தைக் காணே.    1

நன்றதும் தீதுங் காட்டி
நரகொடு சுவர்க்கம் காட்டி
துன்றுபொன் சடையி னார்க்குத்
தொண்டராய் வருவார்க் கெல்லாம்
என்றுமே இறவா இன்பம்
ஈவனே ஈசன் நல்லன்
இன்றவன் தாளைப் பற்றி
யேத்துக நாவாற் பாடி. 2

பாடினார் வேதம் நான்கும்
பரமனார் பரம யோகி
கூடினார் குற்ற மில்லார்
கோள்களும் நாட்கள் காண
ஆடினார் அணியூர்த் தில்லை
அம்பல வாணர் அண்ணல்
நாடினாக் கென்றும் நல்லன்
நல்குவான் முத்தி இன்பம். 3

ஆகமம் உடலாய் நின்று
அருமறை வாயாற் சொல்லும்
போகமேப் புனிதம் பேணும்
புண்ணியன் இறையோன் யெந்தை
நாகமே அணியாக் கொண்டான்
நாரியோர் பாகத் தானை
ஏகமாய் பணிவார்க் கென்றும்
இறப்பிலா வாழ்வேக் காணே. 4

கூறுவார் கூற்றைக் கேட்டுக்
குற்றமில் நன்றே யென்றால்
தேறுவார் தெளிவார் நன்றே
தேவையே பூர்த்தி யென்பார்
சேறுவாழ் மலரை வாங்கி
சேவடி சேர்த்து யன்பாற்
பேறுவாழ் யுலகே யென்பார்
பேச்சினை மறப்பார் பின்னே. 5

இரவொடு பகலு மானான்

இன்பமுந் துன்ப மில்லான்
அரவொடு கொன்றைத் தாரன்
அப்பனாய்த் தாங்கும் வேந்தன்
உரமொடு ஆக்கை போக்கும்
உத்தமன் சித்தன் பத்தி
தருவனே தந்தை தாயான்
தானெனும் அகந்தை இல்லான் . 6

இல்லறங் காட்டும் நல்லான்
இறப்பிலாப் பெம்மான் சீலன்
நல்லறம் சொல்லும் நாதன்
நந்தியாய் நயப்பார்க் கெல்லாம்
வல்லவன் வகுத்த வேதம்
வழங்குவன் வாய்மை நித்தன்
அல்லலிற் அழுந்த வேண்டா
அவனடிப் பணிதல் நன்று . 7

ஆதியாய் உலகம் யாவும்
ஆக்கியே காத்தும் யென்றும்
நீதியாய் நிலையாய் மன்னும்
நிருத்தனே அருத்தம் காட்டும்
சோதியாய் தோற்ற மில்லான்
சுடர்மிகு மழுவாட் படையான்
பாதியாய் பெண்ணைக் கொண்டான்
பசுபதி யெந்தைக் காணே. 8

நரகொடு சுவர்க மேலும்
நானில உலகம் யாவும்
வரவொடு போக்கும் வைத்து
வாழ்வெனும் உறவைக் கூட்டி
சிரபுரத் தலைவன் யெந்தை
செய்வினைப் பயனும் ஊட்டி
பரகதி அருளும் ஆற்றல்
பாங்கினைக் காணு மாறே. 9

உத்துளம் பூசும் வேளை
உயரவே உச்சி முகமாய்

அத்தனே அமபலக் கூத்தா
        ஆதிரை ஆடுஞ் சோதி
பத்திலேன் என்னை யாளும்
        பரமனே பரம யோகி
செத்திடப் பணியா யென்றே
        சிந்திடா அணிகொள் வீரே. 10

திருமுண்டம் தீட்டும் வேளை
        திருநீறைச் சுத்தி செய்து
அருமருந் ததனில் நல்ல
        நீரினை வார்த்து நித்தன்
பெருவடி வாழ்வை யெண்ணி
        பிஞ்ஞகன் பேரைச் சொல்லி
உருவமும் அருவம் நீங்க
        உடல்தனில் பூசு வீரே. 11

குறைமலர் நிறைவு செய்யுங்
        கொள்கையால் மாலும் தன்கண்
பிறையுலா முடியா னப்பன்
        பிஞ்ஞகன் பாதம் சேர்க்க
கறைமிடற் றண்ணல் சுற்றும்
        கருவியை ஈந்தார் வள்ளல்
மறைகளைத் தந்தான் பாதம்
        மன்னிடப் போற்று வோமே. 12

ஊரினோர் ஒன்று கூடி
        ஒருவரைத் தேர்வு செய்து
வாராயோ வந்து நீவீர்
        வணங்குமிக் கோயில் புக்கு
நீரொடு பூவும் சேர்க்கும்
        நியமமே நித்தம் ஓங்க
சீராருஞ் செல்வ னத்தன்
        சேவடி காட்டல் நன்றே. 13

முன்னமே பனுவல் சொன்ன
        முறைமையை வழுவா நாளும்
தன்னலம் இல்லாத் தன்மைத்

தரணியில் கொண்ட சீலர்
அண்ணலா ரடியைப் பேணும்
ஆற்றலை மதித்து நாமும்
திண்ணமாய் உலகில் வாழ்ந்து
திருவடி கலப்போம் நன்றே. 14

மூவரி லொருவ ரல்லன்
முப்புரஞ் செற்ற வேந்தன்
யாவரின் மேலோ னெந்தை
எருதுகந் தேறும் வீரன்
தேவரின் தேவ னத்தன்
தில்லையில் நடனம் புரிவான்
மாவுரி போர்த்த அண்ணல்
மலரடி நம்மின் வீடே. 15

உள்ளுறை வெப்ப மாவான்
உடனுறை கடவு ளத்தன்
சொல்லுறைப் பொருளு மாவான்
சோர்விலாத் தேகங் கொண்டான்
நெல்லுறை சத்தி யாவான்
நிழலுறைத் தண்மை யானான்
வில்லுறை விசையும் செய்த
விமலனை வணங்கு நெஞ்சே. 16

நால்வகைப் பிறப்பை நாளும்
நடத்திடு மயனு மாலும்
மால்வகை அற்றா ரல்லர்
மறுமையை உணர்தா ரல்லர்
நூல்வகை வேதம் சொல்லி
நுட்பமாய் அறிவைத் தீட்டி
ஏழ்வகை தோற்றம் மாற்றும்
எருதேறிப் பாதம் போற்றே. 17

ஒளிமிகு கண்கள் மூன்றை
உடையவன் உலகு யாவும்
களிப்புறச் செய்யும் வேந்தன்
காமாதிக் குணங்க ளில்லான்

வளிநிலம் பூதம் ஐந்தாய்
வருநெறி வேதம் நான்காய்
விளங்கிடு மண்ணல் பாதம்
விருப்பொடு நாளும் போற்றே.
18

சிந்தையைத் திருத்தித் தனைதாழ்த்தி
சிறந்தவ ரிடம்போய் கலைகற்று
முந்தைய வினையின் பரிசறிந்து
மும்மலம் போக்கும் திறங்கண்டு
பிந்தைய பிறப்பை நீக்கிடவே
பிஞ்ஞகன் அருளைப் பெற்றிடவே
மந்திர மோதி மறைபயின்று
மலரடி வணங்கி உய்வோமே. 19

தன்னைதா னுணர்ந்தார் தான்சாரந்த
தத்துவங் காண்பார்த் தரணியிதிற்
பின்னையுங் காண்பார்ப் பிறப்புணர்வார்ப்
பிறப்பிலித் தேவன் திறன்காண்பார்
என்னையு மொருவ னாக்கியவன்
இறைவனாய் எங்கும் நிறைந்திடுவான்
மன்னிடச் செய்வான் மலரடிக்கீழ்
மறுமையை எண்ணும் சிந்தையரே. 20

தோற்றமும் முடிவும் உண்டென்றால்
தோற்றுவா ரின்றித் தோன்றாதே
காற்றினைக் கண்ட நீவீர்காள்
காலத்திற் கேற்ப மாற்றங்கள்
ஆற்றலைக் காணப் பாரினிடை
அளவுகள் கருவி யதுமிஞ்சும்
நீற்றினை பூசு மண்ணல்நம்
நிருத்தனை யெண்ணிப் பார்மினே 21

சிவச்சுட ரொன்றில் கலந்திடுவர்
சீருடைப் பத்தர் சித்தருமே
தவச்சுட ரொன்றை கண்டார்க்கே
தன்னுணர்த் தன்மை தலைப்படுங்காண்

புவச்சுடர் தன்னைப் போற்றிடுவீர்
புற்றிடங் கொண்ட. ஆரூரன்
இவன்சுட ரென்று உலகோரை
இயம்பிடச் செய்வான் காணீரே. 22

உயிர்க்கெனப் படைத்தா னுலகெலாம்
உம்பரு முயிரே முணர்ந்திடுவாய்
பயிர்களு முயிரே பகுத்தறிவாய்
பக்குவம் பெறவேப் பிறப்பித்தான்
கயிலைவாழ் கடவுள் கண்ணுதலான்
கலைகளைக் காட்டி யாவர்க்கும்
தயிரொடு கலந்த நெய்போன்றே
தன்னையுங் காட்டித் திகழ்வானே. 23

நிச்சய மோர்நாள் இறந்திடுவோம்
நிறுத்திடும் வழியும் இங்கில்லை
அச்சமே நாளும் உடல்காக்க
அறுமுகக் கடவுள் தாதையவன்
உச்சியின் மேலாய் உறைகின்றான்
உன்நிலை நன்றாய் அறிந்துடுவான்
நச்சிடும் அடியார் துயர்களைவான்
நாகிடைப் புக்கோம் குறையிலையே. 24

திருந்திட நினைப்பீர் தெளிவுறுமின்
தேவையைக் குறைத்து வாழ்வீர்காள்
பெருந்துறை யமர்ந்தப் பிஞ்ஞகனை
பிறப்பொடு இறப்பை அறுத்திடவே
அருந்தமிழ் பண்ணால் புகழ்பாடி
அடைக்கலம் கேண்மின் பொன்னடியே
வருந்துயர் போக்கும் மாமருந்து
வருகவே யென்பார் நிச்சயமே . 25

போயின ஆற்றல் முதுமையினால்
புகலிடந் தருவா ராருளரோ
காயினை உண்ண வழியில்லை
கடித்திடும் பற்கள் கெட்டனவே

தாயினும் கருணை மாக்கடலே
தனிமையைத் தீர்க்கும் நாளென்றோ
நாயினுங் கடையேன் வாழ்வுபெற
நங்கையோர்ப் பங்கா அருளுதியே. 26

பிணியிலா வாழ்கை பிறவாமை
பிறப்பிலி பெம்மான் வழங்குவனே
மணிமிடற் றண்ணல் மறைநான்கின்
மாண்பினை யுணர்ந்து முறைப்படியே
பணிசெயத் துணிவீர் சிவப்பணியே
பத்தரின் பெருமை அளப்பரிது
அணியுமின் நீறுங் கண்டிகையும்
அதற்கிணை இல்லை உலகினிலே. 27

உணர்ந்தவர் போற்றும் உத்தமனே
உண்மையும் பொய்மையுங் காட்டியவா
புணர்ச்சியைக் கடந்த போகமேநின்
பொன்னடி இறைஞ்சிட அருளினையே
கணக்கிலாக் திருவுரு கொண்டடியார்
குறிப்பினைக் முடித்திடும் பெருமானே
இணங்கினன் நாயினன் இறவாதே
இருந்திட வணங்குவ னிணையடியே. 28

குரைகழற் போற்றுதன் காரணத்தை
குவலய முணர்திடப் பலதுறைகள்
வரைமுறை வகுத்தனை வாழ்முதலே
வறுமையும் வளமையும் நின்னருளே
திரைகடல் பெருவிடம் உண்டனைபின்
திருவருள் புரிந்தனை யாவர்க்கும்
அரைதிகழ் புலியதல் அம்பலவா
அடியினைப் புகழ்ந்தனன் போற்றினனே 29

நிச்சயம் பிறப்பை அறுத்திடுவான்
நீள்சடைக் கடவுள் நம்பெருமான்
அச்சமில் பெருமை அடியார்க்கு
அஞ்செழுத் தோதி அருமறையின்
உச்சியிற் பழுத்த கனியுண்ண

உமையொரு பாகன் அருள்தருவான்
கச்சியே கம்பன் கழலடியே
கைதொழப் பெருவோம் நம்பொருட்டே. 30

கற்றிடத் தந்தான் சிவஞானம்
கண்டிடச் செய்தான் நன்நெறிதான்
பற்றிடக் கொடுத்தான் பாதமலர்
பவக்கடல் நீந்த உதவினனே
நற்றவம் புரியும் வகையருளி
நாயினுங் கடையேன் மேன்மையுற
மற்றிடத் தன்மை காட்டினனே
மாதொரு பாகன் உள்ளிருந்தே.
31

உள்ளுமாய்ப் புறமாய் நின்றிடுவான்
உமையொரு பாகன் பிறப்பிலியன்
தள்ளினும் போகான் கருணையினான்
தனிப்பெருந் தன்மை கொண்டபிரான்
தெள்ளியக் கங்கைச் சடைமகுடன்
தென்னவன் மதுரைப் பதிக்கரையன்
துள்ளிடும் மறியைக் கரங்கொண்டான்
துணையாய்த் தருவான் பாதமதே. 32

முன்னமுங் காணேன் முடிவறியேன்
முப்பொருள் வாய்மைத் திறமறியேன்
பின்னமுங் காணேன் பிறப்பறியேன்
பிஞ்ஞகன் அவன்தன் சீர்தாளை
இன்னுமுங் காணேன் இறப்பறியேன்
இருவினைப் பயனின் வாழ்வறியேன்
அன்னையின் வயிற்றில் பிறவாமல்
அடியனேன் உய்வது என்றன்றே 33

உத்தம னத்தன் திருவருளை
உணர்திலே னின்னுங் கடைநாயேன்
பித்தமுங் கொண்டேன் பேய்தேரின்
பின்னமுஞ் சென்றேன் நாவற்றி

அத்தியின் தோலை உரித்தபிரான்
அருளினன் சிறிதே சிவஞானம்
முத்தியை உணர்ந்தேன் முழுமுதலோன்
முன்கரம் காட்டும் திருவடியே 34

உலகினைப் படைத்தான் உயிர்தனக்காய்
உம்பரும் நம்போற் உயிர்குலமே
பலகையைக் கொடுத்தான் பாண்டியர்க்காய்
பசுபதி சிவன்தன் திருவருளே
மலமுடைக் குரம்பை யிதுமாய்க்க
மருந்தினை தந்தான் அஞ்செழுத்தே
நலம்பெற யெண்ணும் அன்பரெலாம்
நாடொறும் ஓதி மகிழ்வாரே. 35

ஓதுவீர் நாளும் அஞ்செழுத்தை
உணருவீர் உண்மைத் தெளிவுறுவீர்
ஏதொருத் துயரம் தொடர்ந்திடினும்
இறைஞ்சுக முக்கண் அப்பனையே
மாதொரு பாகன் நம்பெருமான்
மக்களைக் காக்கும் கருணையினன்
தீதெனக் கொண்ட துயரெல்லாம்
திருந்திடக் கொடுத்தப் பரிசதுவே . 36

நேர்படச் செய்வான் நிமலனவன்
நிலையிலா வுலகில் தீமையெலாம்
வேர்படக் களைவன் விகிர்தனவன்
விண்ணவர் மண்ணோர் யாவர்க்கும்
சீர்படக் காட்டும் நீதியெலாம்
சிவலோக மன்னன் நம்மிறையோன்
பார்பட நடந்தான் ஆரூரில்
பத்தரின் வேண்டல் தம்பொருட்டே. 37

விகிர்தனின் பாதம் சேர்ந்திடவே
விரும்பிடு நெஞ்சே ரிதுகேள்நீ
பகிரதன் தனக்காய் கங்கையவள்
பாய்ந்திழி வரவே சடைமுடித்தான்
மகிமையை யுணரா மாக்களெல்லாம்

மயங்கியேத் திரிவார் உலகியல்பு
சுகிரென யென்றும் திளைத்திடவே
சுந்தரன் சிவன்தாள் பற்றுமினே . 38

துறைபல வகுத்தார் அத்துறைக்கே
தூயனொ ருவரைப் பணியமர்த்தி
நிறைவுறச் செய்வர் தலைவரென
நிருத்துவ கண்டோம் மாப்போல
கறைமிடற் றண்ணல் வகுத்தநெறி
காசினி யாவும் கரங்கொண்டு
முறைபல தேவர் உயர்பதவி
முன்னவன் ஆணை இயற்றுவரே. 39

சங்கரா நின்தாள் கருணையினால்
சார்ந்தனன் சைவத் துறையதனில்
எங்குமாய் நிறைந்தப் பரம்பொருளே
ஏழையோர் பாகா யெம்பெருமான்
திங்களைக் கொண்டச் செஞ்சடையா
திகம்பரா தேவாத் தமிழ்தலைவா
அங்கணா அடியேன் பிறப்பின்றி
அடிநிழல் வாழ அருளுதியே. 40

வாழ்வதன் பயனை இன்றுணர்ந்தேன்
வையகம் பெற்ற நாய்கடையேன்
தாழ்வது நேர்ந்தால் லினைப்பரிசே
தாமரை மலர்த்தாள் தலைதருவாய்
யாழ்பயில் கலைஞர் வாழ்தில்லை
பொதுநடம் புரியும் பெருமானே
ஆழ்கடல் நஞ்சம் உண்டனையே
ஆதரித் தழைப்பாய் பராபரனே.
41

வெற்றியே யென்றும் நம்பெருமான்
விருப்பமோ உயிர்கள் தம்போன்றே
பற்றது யில்லா யோர்நிலையிற்
பன்நெடுங் காலம் நிலைத்திருக்க
கொற்றவன் கொள்கை நால்வேதக்

குறிப்பினைக் காட்டி ஆலின்கீழ்
நற்றவக் கொள்கை நடுநிலையிற்
நாடொறும் சிரங்கொள் சிறந்திடவே.
42

கற்றிட யெளிதே கண்ணுதலான்
கருணையின் திறத்தைப் பெற்றார்க்கே
புற்றிடங் கொண்டான் புகழறிவார்
புன்மைகள் தவிர்த்து நன்மையுற
பற்றிடங் கொள்வார் பழவினையின்
பரிசைனை யேற்றுப் பண்புடனே
நற்றிடஞ் சென்று நாடோறும்
நம்பனார் திருத்தாள் போற்றுவரே. 43

தம்பிரான் திருத்தாள் கதியாகும்
தரத்தினில் உயர்ந்தோர் குடியிருப்பர்
எம்பிரான் சிவனே யாவர்க்கும்
இடத்தினைத் தருவான் வாழ்ந்திடவே
செம்பினிற் களிம்பாய் சேர்த்தமலம்
சேவடித் தொழவே நீங்கிவிடும்
அம்பினாற் புரங்கள் எரித்தபிரான்
அடைக்கலந் தருவான் சிரந்தாழ்த்தே. 44

சிரத்தினில் கங்கை தங்கிடவே
செய்தனன் யெம்மான் கயிலாயன்
கரத்தினில் சூலப் படையுடையான்
காமனின் உடலைப் பொடிசெய்தான்
பரம்பெரும் கருணை பரஞ்சோதி
பசுபதி வெள்ளை விடையேறி
வரந்தர வருவார் சோதித்து
வாங்கிடப் பெறுவோம் முகமலர்ந்தே 45

முத்தியை நாடும் நோக்கோடு
முக்கணா சிறியேன் புவிதோறும்
செத்திடப் பிறக்கும் செயல்விடுத்து
சேவடி நிழலிற் மன்னியிட

அத்தனே அடியேன் அடைக்கலமாய்
அருளடிப் பெறவே ஆசையொடு
நித்தனே நிமலா நிருத்தனுனை
நினைந்தனன் கண்டா யம்மானே. 46

மானொரு கரத்தில் கொண்டோனே
மங்கையோர் பாகா மால்விடையா
தேனெனத் திகழும் பரஞ்சோதி
தென்திருத் தில்லை சிவனேநீ
வானென நிலனாய் வளியொளியாய்
வையகம் யாவும் வாழ்வுறவே
கோனென விளங்கும் வாழ்முதலாய்
கூத்தனே குரைதாள் போற்றியதே. 47

நிறைவினை நினைமின் இவ்வுலகில்
நிலைத்தநற் பொருளைச் சிந்திமினே
குறையது இல்லா உயிரினத்தை
கூறிட முடியா என்றென்றும்
மறையது சொல்லும் வாய்மையினை
மனத்திடை வைமின் நாடோறும்
கறைதிகழ் மிடற்று கண்ணுதலான்
கழலடிக் காண்மின் ஆலயத்தே. 48

ஆலயம் புகுமின் அரனடியே
அடைக்கலங் காண்மின் யென்றென்றும்
மாலயன் தேடிக் காணாத
மலரடி தொழுமின் பத்தியினாற்
சீலமும் நோன்புங் கொண்டார்க்கே
சிவனருள் பதியும் காண்பாயே
ஆலமு துண்டான் நம்வினையை
அகற்றிடக் கேண்மின் பிறப்பறவே . 49

நின்செயல் யாவும் நிலவுலகில்
நிற்பன கிடப்பப் பறப்பனவும்
தன்செய லென்றே யெண்ணாதே

தன்பசி முடிப்பக் கண்டோமே
முன்செயல் வினையின் பரிசளிக்கும்
முத்தனே முதல்வா நாய்கடையேன
வன்செயல் நீங்கி வாழ்ந்திடவே
வழியருள் செய்வாய்ப் புண்ணியனே.
50

புண்ணிய பாவ மிவையிரண்டும்
புவியினர் காண அறமுரைத்தாய்
எண்ணுவா யெண்ணக் குறிப்பறியும்
இறைவனே பெண்ணோர்ப் பாகத்தாய்
விண்ணவர் வணங்கும் பெருமானே
வினைதருப் பிறப்பை அறுப்போனே
மண்ணினிற் பிறந்தப் பயனுற்றேன்
மறுமையை நீக்கி அருளுதியே 51

நானிலம் பிறந்தேன் நன்நெறிதாம்
நன்றெனக் கற்றுத் தெளிவுறவே
மாநிலம் சமைத்த சிவபெருமான்
மறைமொழி காட்டி நேர்வழியில்
தூநிலம் பேண அருளினனே
தொடக்கமு மீறும் இல்லாதான்
பூநிலம் மன்னும் அவன்பாதம்
போதெனத் தங்க அருளுதியே.
52

நிலையிலா வுடலை யிடங்கொண்டு
நேர்வழிச் செல்லத் துணிவின்றி
வலையினுள் விழுந்தேன் பொருட்பற்று
வானவர்த் தலைவா சிவலோகா
மலையினை வளைத்தச் சிலையதனாற்
மருளரின் புரங்கள் எரித்தோனே
இலையுடை சூலப் படையானே
இடர்மிகு பிறப்பை யறுப்பாயே.
53

தீவினை ஐந்தைத் தெரிந்திடுவோம்

திரும்பவும் பிறவாத் தடுப்பதற்கே
நாவினை யடக்கல் நன்றதனால்
நாடொறும் பொய்யும் புலால்நீக்கி
பூவினைக் கொய்யுங் நாமடியோம்
பிறன்மனை நயவாப் பெருங்கொள்கை
பாவினைப் பாடும் பரிசதனால்
பரமனின் பாதம் பணிவோமே.
54

மயக்கிடும் மதுவை உண்ணாதீர்
மறுமையாம் பிறப்பை தடுப்பதற்கே
தயங்கியே வாழ்வீர் கொலைதவிர்த்து
தரணியில் வாழப் பிறந்ததுவை
அயலவர் உறவை அகற்றிடுவீர்
அண்ணல் சைவத் துறைசார்ந்து
இயல்பினாற் பாசம் இல்லானின்
இணையடி பணிவோம் வினையறவே. 55

மன்னுவம் நாம்போய்ச் சிவபுரத்தே
மயக்கமே இல்லாத் தெளிவோடு
உன்னுவம் சிவனின் விளையாட்டை
உயிரொடு கலந்த உறவுணர்ந்து
இன்னுமோர் பிறப்பு வேண்டாவே
இன்பமுந் துன்ப மிங்குற்றோம்
தன்னுணர்ந் திட்டோம் பெம்மான்தன்
தாளினை ஏற்போம் தனித்திருந்தே. 56

தனித்துநாம் பிறந்தோம் தனித்திறப்போம்
தானெனு மகந்தை யுள்ளமட்டும்
மனித்தயிப் பிறப்பை மதித்திடுவோம்
மாண்புடன் வாழ்வோம் மறுமையத
சனித்தநாள் முதலாய்ப் பெருந்துயரம்
சங்கரன் மட்டும் பிறவாதான்
இனித்தமே உடையான் அவன்பாதம்
யேத்துதல் நம்மின் உரிமையதே 57

ஆலமர் கடவுள் திருக்கரத்தில்
அமர்ந்திடுச் சுவடி உட்பொருளைச்
சீலமர் கரத்தின் முத்திரையால்
செப்பிய நாழேல் ஆகமத்தை
காலமர் முனிவர் நால்வருமே
காட்டிய போதம் சிவஞானம்
பாலமர் சென்று பற்றுமினே
பவக்கடல் கடக்கும் வழியதுவே. 58

உய்தலை யுணராப் பண்பினரே
உமையொரு பாகன் திருத்தாளைக்
கைத்தலைக் கூப்பி கருணையினை
கவர்ந்திட முனைவீர் உரிமையினாற்
பைத்தலை அரவம் புனைந்தபிரான்
பசுபதி நம்மின் பிழைபொறுத்து
செய்தவப் பரிசைத் தந்தருளி
சேர்ப்பனே பிறவாப் பெருநெறியே. 59

பெருநெறிச் சைவத் துறையதனில்
பிஞ்ஞகன் நாம மருந்துண்டாற்
சிறுநெறிச் சேராத் தடுத்திடுங்காண்
செய்வனக் காட்டித் திருத்திடுங்காண்
திருநெறி பற்றி நிலைப்பார்க்கே
திருவடித் தீக்கை நிகழ்ந்திடும்பின்
அருநெறி பிறவாத் தன்மையுடன
அடைக்கல மரன்தாள் மன்னுவமே. 60

நீக்குவனக் கேண்மின் பசுபாசம்
நிரந்தரங் கேண்மின் சிவக்கழலே
போக்குவனக் காண்மின் பிறப்பிறப்பு
புகலிடங் காண்மின் பதிநிழலே
ஆக்குவன கேண்மின் நடுநிலமை
அறவழிச் செல்மின் இன்பமதே
மாக்கருணைக் கடலோன் உமைப்பாகன்
மலரடி போற்றல் நன்றியதே. . 61

நன்றிக்கே வித்தாம் நல்லொழுக்கம்
நாடோறும் செய்வீர் வாய்மையொடு
கன்றினுக் குதவும் பசுவதுபோற்
கண்ணுதற் கடவுள் நமக்குதவி
மன்றினுள் நட்டம் பயில்கின்றான்
மலரடிப் பாதம் தலைபெறவே
சென்றிட முயல்வோம் சிறுநகையாற்
செல்வனார் காட்டும் குறிப்பிதுவே. 62

கண்களைக் கட்டிக் கைமலரால்
கண்ணுதற் கடவுள் தாள்சொரிய
பெண்களைக் கொண்டப் பெம்மானின்
பெயர்களி லொன்றை எமக்கிட்டு
நன்கல நீரால் மஞ்சனமும்
நாதன் மூல மந்திரமும்
பண்களில் பாடும் பரிசினையும்
பரமனின் அருளால் பெற்றேனே. 63

**மா மா காய் மா மா காய் திருச்சிற்றம்பலம்**

பதியாய் விளங்கும் இறையோனை
பகுத்துப் பார்ப்போர் பசுவாவார்
விதியாய் விளங்கும் வினையாவும்
விண்ணோர் மண்ணோர் செயலேயாம்
நதியாய் விளங்கும் நம்பெருமான்
நாளும் போற்றும் பொருளாவான்
கதியாய் விளங்கும் கழலடியைக்
கண்டு தொழுவார் தன்னுணர்ந்தார் 1

உயர்ந்தப் பொருளே உமைப்பாகா
உன்னில் உயர்ந்தா ருலகில்லை
அயர்ந்தார் கென்றும் அரியவன்நீ
ஆக்கிக் காக்கும் ஐந்தொழிலோய்
கயந்தா முரித்த அதிதீரா
கண்கள் மூன்றைக் கொணடோனே
வியந்தேன் நாயேன் நின்னடியே

விரும்பி தொழுதேன் மன்னவனே .          2

தூற்றிப் பழிக்கு முலகத்தில்
தூயாய் நிந்தன் அன்பரொடு
போற்றிப் பரவப் பெற்றேனான் பு
யங்கப் பெருமான் திருவருளே
காற்றாய்க் கனலாய்க் கதிர்நிலவாய்
கண்டேன் நாயேன் கரங்குவித்து
மாற்றம் பெற்றேன் மலரடிக்கீழ்
மன்ன வருள்வா யுத்தமனே.          3

அருளே ஆரூர்ப் பதிக்கரசே
அஞ்சைக் கலத்து அப்பன்நீ
பொருளேப் புகலூர்ப் பெருமானே
போக்கும் வரவும் இல்லானே
தெருளே திசைகள் பத்தினிலும்
தேசம் சமைத்த பிஞ்ஞகனே
மருளிற் புகுந்தேன் மயக்கறுத்து
மலர்த்தாள் வைப்பாய் பசுபதியே.          4

பசுவின் குலாங்கள் யாவைக்கும்
பரமாய்த் திகழும் பரஞ்சோதி
விசுத்தி முதலாம் ஆதாரம்
விளங்கச் செய்த்தாய்க் காயத்தில்
திசுக்கள் கொண்டத் தேகத்தில்
தினமுந் துயரம் ஏராளம்
வசுக்கள் வாழும் இடம்நீக்கி
வைப்பாய் எம்மை மலரடியே.          5

சுட்டும் பொருளைப் பார்மின்காள்
சுழற்ச்சி நின்றுத் தோன்றுமது
கட்டில் அடங்காப் பொருள்பலவும்
காணக் கிடைக்கும் காசினியில்
எட்டுக் குணத்தான் எருதுகந்தான்
என்றும் நம்மைக் காத்தருள
நட்டம் பயிலக் காண்பீர்காள்
நாளும் நன்றே செய்வீரே.          6

கண்கள் மூன்றைக் கொண்டோனே
கயிலை மலைவாழ் பரஞ்சோதி
விண்ணும் மண்ணும் வளிவொளியாய்
விளங்க எங்கும் நின்றோனே
பெண்ணும் ஆணும் நீயன்றோ
பிறப்பை யறுப்பாய் கண்டேனே
பண்ணார்ப் பாடல் பயின்றேத்தப்
பரமா வருள்வாய் குணநிதியே . 7

மலர்மே லுறையு மயன்தானும்
மாலும் தேட அனலுருவாய்
நிலமும் விண்ணுங் கடந்ததன்மேல்
நின்றாய் யெம்மான் அருணகிரி
வலங்கொள் அன்பர்த் தாமுய்ய
வார்த்தை ஒன்றை வழங்கியவா
கலக்கம் தவிர்த்து யெமையாண்டு
கழல்கீழ் வைப்பாய் கண்ணுதலே . 8

புவியின் வாழ்க்கை நிலையில்லை
பொன்னும் பொருளும் நிலையில்லை
அவியின் உணவை உண்போரும்
ஆயுள் முடிவைக் கொண்டோரே
செவியிற் தோடு பூண்டபிரான்
செய்யக் கமலத் திருப்பாதம்
கவியை யேற்கும் கருத்தறியும்
காயம் மாற்றும் வாழ்த்துதுமே
9

ஆசை மறைத்து ஆர்வமுடன்
ஆற்றும் செயலை அறிந்திடுவான்
பாசம் மிக்கார் போற்பழகும்
பண்பில் நகரைக் காட்டிடுவான்
நேசம் வைத்தார் நிகழ்வுகளை
நினைய செய்வான் கயிலாயன்

ஓசை ஒளியாய் நின்றானை
உணர்ந்து பரவத் துணிவோமே.
10

தலைமேல் திருத்தாள் தந்தருள்வாய்
தனக்கோர்த் தந்தை இல்லானே
மலையைச் சிலையாய் வளைத்தோனே
மாசில் வீணை கரத்தோனே
அலைகொள் ஆழி விடமுண்டாய்
அல்லல் நீக்கும் அருமருந்தே
வலையுள் பட்டேன் பிறப்பறுத்து
வாவென் றழைப்பாய் எம்மானே . 11

முத்திப் பரிசைத் தந்தருளும்
முதல்வா முக்கண் பெருமானே
பத்தி நெறியைக் காட்டியவா
பரனே யெந்தன் வாழ்முதலே
அத்தி உரித்த அதிதீரா
அரசே பெண்ணோர் பாகத்தாய்
தத்தித் தவழும் பிறப்பறுத்து
தயவாய் யெம்மைக் காப்பாயே . 12

காக்குங் கடவுள் திருமாலும்
கையாற் தொழவார் நின்னடியே
பூக்கும் மலர்மேல் அயன்தானும்
பொற்றாள் பணிந்து பூசிப்ப
தீக்கை யுற்றேன் யான்தானும்
திரும்பப் பிறவா நெறிகண்டேன்
ஆக்கை நீக்கும் அம்பலவா
அடிக்கீழ் வைப்பாய்ச் சோதியனே . 13

கங்கை தங்கு செஞ்சடையீர்
கரியி னுரியைப் போர்த்தோனே
திங்கள் தங்கு நீள்முடியீர்
தேசம் யாவுங் காப்போனே

பொங்குங் கடலின் நஞ்சமுதீர்
புரங்கள் மூன்றைச் செற்றோனே
எங்கள் தலைவ நின்பாதம்
ஏத்தப் பெற்றேன் கருணையதே. 14

கருணா கரனே சிவமூர்த்தி
காட்சிக் கெளியாய் பரஞ்சோதி
அருணாச் சலனே அம்பலவா
ஆடும் பரமே கயிலாயா
வருணன் முதலாம் தேவரெல்லாம்
வாழ நஞ்சம் உண்டோனே
தருணம் இதுவே நீயெம்மைத்
தாங்கித் தருவாய் முத்தியதே. 15

ஞாலம் பிறந்தார் தன்னறிவை
நன்னூல் கற்றுத் தெளியுறுதல்
சீல மென்பார்ப் புலவோர்காள்
சிந்தித் துணர்வீர் புலனடக்கம்
காலம் மூன்றைக் கடந்தபிரான்
கழலைத் தொழவே நினையாதார்
ஓல மிடுவார்ப் பின்னாளில்
உயிரின் தன்மை யுணராரே. 16

உணர்வீ ருண்மை நிலைமாறா
உயர்ந்தோன் சிவன்தன் திருவருளைற்
உணர்வீ ருண்மைப் பசுபாசம்
உயர்ந்த நிலையைக் காண்பீரே
உணர்வீர் பதியின் ஐந்தொழிலை
உலகோர்க் குணத்தைக் காண்பீரே
உணர்வீ ருண்மை ஞானத்தாற்
உய்வைப் பெறுவீர் திருவடியே.
17

இறையே எல்லாப் பொருள்நீயே
இன்பத் துன்பம் அருள்வோனே
மறையே மறையின் பொருள்நீயே
மற்றோர் பற்று மில்லானே

பிறையே பிறைசேர் சடையானே
பிறவா யாக்கைப் பெரியோனே

கறையேன் நாயேன் பிறப்பின்றி
காத்துக் கழல்கீழ் வைப்பாயே . 18

வைப்பே வானோர் வாழ்வதற்காய்
வைத்தாய் நஞ்சம் திருக்கண்டம்
செப்பார் மங்கை யொருபாகம்
சேர்த்தாய் அழகாக் குழைக்காதா
முப்பாற் பிறவி உலகுய்ய
மூவா நான்கு மறையீந்தாய்
அப்பா அல்லல் பிறப்பறுத்து
ஆவல் தீர்ப்பாய் உயர்ந்தோனே.
19

உயர்ந்தப் பொருளே உமைப்பாகா
உன்னில் உயர்ந்தா ருலகில்லை
அயர்ந்தார்க் கென்றும் அரியவன்நீ
ஆக்கிக் காக்கும் ஐந்தொழிலோய்
கயந்தா முரித்த அதிதீரா
கண்கள் மூன்றைக் கொணடோனே
வியந்தேன் நாயேன் நின்னடியே
விரும்பி தொழுதேன் மன்னவனே . 20

மன்னா மாதோர் பாகத்தாய்
மலர்மேல் அயனுந் திருமாலும்
தன்னைத் தானே கடவுளராய்
தனக்கோர் நிகரில் அகம்பாவம்
உன்னைச் சாட்சிப் பொருளாக்கி
உயர்ந்தார் கீழ்மேல் நெடுங்காலம்
என்னே நின்தாள் பெருஞ்சீரை
யானும் பாட அருளுதியே . 21

பணிகள் பலவாய் உலகிருந்தும்
பகுத்தா ரவைகள் கலையாகும்
தனித்தே நின்று அத்தனையும்

தாங்கிப் பேணும் கண்ணுதலா
கனியின் சுவையாய் கற்கண்டாய்
காண்பார் அடியார்த் திருக்கூட்டம்
இனியும் மண்மேல் பிறப்பின்றி
இணைதாள் வைப்பாய் பிஞ்ஞுகனே . 22

பித்தா வென்றே யுனைப்பேசி
பேணத் செய்தாய்ச் சுந்தரரை
அத்தா உந்தன் அடிமலரை
அன்பாற் பரவும் அடியாரைச்
செத்துப் பிறக்கும் நிலைமாற்றி
செந்தாள் சேர்ப்பாய் கண்டேனே
முத்தே யெந்தன் முகவுரையை
முடித்து வைப்பாய் சோதியனே . 23

சிறியேன் என்பார் தனைத்தாழ்த்தி
சிறந்தா ரவரே தெளிந்தாரே
வறியேன் என்னும் சொல்லதனை
வாயாற் சொல்லார் வினைகண்பார்
மறிகை ஏந்தும் சிவனவனின்
மலர்த்தாள் நிழலே துணையென்பார்
வெறிகொள் கொன்றை வேந்தனவன்
விறைதாள் பணிவார் பிணியிலரே. 24

ஆதிப் பரமன் சிவனவனை
அகத்துட் காண்பார் யோகியர்காள்
ஓதி உணர்ந்த உத்தமர்கள்
உள்ளும் புறத்தும் காண்பார்கள்
சேதி யறிமின் செம்மலரோன்
செல்லா இடமில் யெவ்விடத்தும்
நீதி நேர்மை நீள்சடையோன்
நிமலன் பாதம் நினைவோமே. 25

நினைவால் செயலை முடித்திடுவான்
நீங்கான் யென்றும் உயிர்கலந்தான்
வினையொன் றில்லா விரிசடையன்
விமலன் ஞாயிறு யெண்குணத்தான்

கணையாற் புரங்கள் செற்றபிரான்
காப்பான் கயிலை மலையரையன்
முனைவன் முக்கண் பரஞ்சோதி
முத்தி இன்பம் தருவானே. 26

இருப்பைக் கொண்டான் இதயத்துள்
இனிதாய்க் கலந்தான் இணையிலியான்
திருவாய்த் திகழும் திருவடியை
தேடிக் தொழுதேன் தினந்தோறும்
விருப்பால் தலையைத் தாழ்த்திடுவேன்
வீட்டின் பயனை உணர்ந்ததனால்
கருப்பை வாழ்ந்தக் காலமதைக்
கண்டேன் யினிநான் உய்தேனே. 27

நில்லா வுலகில் நீள்பிறப்பின்
நிலையை யுணர்ந்தார் திருவார்த்தைச்
சொல்லாய்ப் பெற்றேன் கடைநாயேன்
சோம்பல் நீக்கும் நல்மருந்தை
எல்லா யிடத்தும் நிறைந்திருக்க
எடுத்தத் திருத்தாள் திறங்காட்டி
வல்லான் சிவன்தன் பெருங்கருணை
வளமுங் காட்டப் பெற்றேனே. 28

அருள்வாய் யெந்தைப் பெருமானே
அல்லற் பிறவி யதுநீக்கி
உருவே யில்லா யோர்நிலையில்
உன்தாள் நிழலிற் உய்ந்திடவே
மருளே யில்லா அன்பரொடு
மருவி நாயோன் நாடோறும்
உருகி நிற்க வேண்டுவனே
உமையொர் பாகா யெந்தாயே.
29

பிறவிப் பிணிக்கோர் நன்மருந்தைப்
பெற்றேன் நாயேன் பிஞ்ஞகனின்
இறவா இன்பம் தந்தருளும்
ஈடில் பெருமை அஞ்செழுத்து

திறவா ஞானக் கண்திறந்து
தெளிவாம் நிலையைத் தந்தருளும்
அறவான் யெந்தை அம்பலவன்
அடிக்கீழ் வாழ்வேன் நிச்சயமே.
30

வீட்டின் விபரம் விளம்பியவா
விகிர்தா எந்தைப் பரஞ்சோதி
கூட்டுள் பட்ட உயிரினங்கள்
கூடா ஒழுக்கம் விட்டதன்பின்
தேட்டை காண்பர் நின்னடியே
திருந்தத் தொழுவர் நாடோறும்
வாட்டம் காண்பான் எம்பெருமான்
வருத்தம் போக்க வருவானே . 31

வருவான் யெந்தைச் சிவபெருமான்
வந்தென் தலையில் திருவடியைத்
தருவான் மாயா உடல்போக்கி
தரணிப் பிறப்பைத் தடுத்திடுவாய்
உருவாய்த் பெற்ற நாள்முதலாய்
உணரா நின்றேன் யாரென்று
திருவாய்த் திகழும் அருமருந்தால்
தெளிந்தேன் ஆவல் தீர்ப்பானே.
32

ஆக்கும் கடவுள் அயன்தானும்
அழிக்குங் கடவுள் உருத்திரனும்
காக்கும் கடவுள் திருமாலும்
கறைகொள் கண்டன் திருத்தாளை
வாக்கும் மனமும் புகழ்ந்தேத்தி
வணங்கி யேத்தப் பெற்றதனால்
நீக்கல் இல்லாத் தொழிலியற்ற
நிருத்தன் ஆணைக் காணுமினே. 33

புரிபுன் சடையன் திருத்தாளே
புகுதப் பெறுவேன் கடைநாயேன்
பரிவாய்த் தருவான் கருணையினான்

பவமாம் கடலில் அழுந்தாமல்
கரியின் உரிவைப் போர்த்தபிரான்
காமன் உடலை எரிசெய்தான்
திரியும் புரத்தை எரித்தபிரான்
திருத்தாள் சார்ந்து வாழ்வோமே. 35

உடலின் வேறாய் உள்ளேனை
உண்மை யுணர உதவினனே
கடலின் நஞ்சம் உண்டபிரான்
காமன் காய மெரித்தபிரான்
மடலைக் காட்டி மருள்நீக்கி
மாயா உலகப் பொருள்காட்டி
குடலை மாய்க்கும் மருந்தளித்தான்
குற்றா லத்தெம் பெருமானே 36

எல்லா மறிவான் நம்மிறையோன்
எதிலுங் கலப்பான் நம்பெருமான்
சொல்லா லுரைக்க யியலாதே
சுவைத்துப் பார்மின் தெவிட்டாதே
கல்லா லமர்ந்து மறையுரைத்தான்
காலன் தன்னை செற்றுகந்தான்
இல்லா யிடமோ உலகில்லை
இனிதேப் பரவி யேத்துமினே. 37

மறைகள் நான்கை தந்தோனே
மாதோர் பாகம் மகிழ்ந்தோனே
கறைகொள் மிடற்று கண்ணுதலோய்
காமன் காயம் எரித்தோனே
பிறைகொள் சென்னித் திருச்சடையா
பெம்மான் பெற்றம் உகந்தோனே
பறைகள் முழங்கும் திருக்கயிலை
பார்க்கச் செய்வாய் பராபரனே .
38

பாரோர் புகழும் பரஞ்சோதி
பனுவல் பாடும் புலவோர்கள்
சீரார்த் தில்லை நகர்மேய

சிவனே நின்தாள் போற்றிசைப்ப
ஆரா அமுதே அவிநாசி
அப்பா அணிகொள் கயிலாயா
ஊரார் இகழும் என்தன்னை
உய்யச் செய்வாய் உத்தமனே. 39

உத்திப் பலவால் உலகோர்கள்
உண்மை மறைப்பர் தான்வாழப்
புத்தித் தெளிந்தார் தனைத்தாழ்த்தி
புனிதா வுந்தன் திருவடியை
பத்திச் செய்துப் போற்றிசைப்பர்
பன்னாள் செய்தப் புண்ணியத்தால்
முத்தித் தருவாய் முழுமுதலே
மூவர் காணா முதல்வோனே . 40

முதலும் முடிவு மில்லோனே
முக்கண் யெந்தை பரஞ்சோதி
இதழ்கொள் கொன்றை அணிந்தோனே
இறவா யாக்கைப் பெரியோனே
கதவம் திறக்கச் கருணையினாய்
காட்சிக் கெளியாய் கயிலாயா
பதங்கள் வைத்தாய் முத்தியிலும்
பரமாக் கயிலை மலைக்கரசே. 41

தன்னைக் காட்டான் தான்தோன்றி
தானேச் சமைத்தான் உலகெல்லாம்
சொன்னான் வேத ஆகமங்கள்
தோற்றும் பலவாம் பேதங்கள்
இன்னத் தன்மை யாவையுமாய்
இமைகள் மூடும் நேரத்துள்
பின்னஞ் செய்வான் பிஞ்ஞகனே
பேணி மகிழ்வாய் பெய்கழலே.
42

உருவ மில்லை என்பாரும்
ஒளியே யென்பார் சிலபேரும்

பருவாய் இல்லை ஆயிடினும்
பகவன் சிவனே பசுபதியான்
அருவம் உருவம் அருவுருவாய்
அண்ணல் திகழ்வான் பரஞ்சோதி
திருவாய் போற்றும் ஞானியர்காள்
தினமும் போற்றக் காணுமினே.
43

கொலையுங் களவுஞ் செய்தேனோ
குற்றம் புரிவார்க் கூட்டுறவால்
புலையா மூனைப் புசித்தேனோ
புறமாம் சமயத் தொடர்பாலே
கலையை விலையாய் விற்றேனோ
கயிலை நாதா திருவடியைத்
தலையால் வணங்காக் கழித்தேனோ
தயவைத் தருவாய் தம்பிரானே 44

சைவத் துறையைச் சார்ந்தவர்கள்
சாற்றும் மெய்மை செவிகேட்டு
உய்யும் வகைதாம் உணர்ந்தோமே
உமையாள் கேள்வன் நம்பெருமான்
செய்யும் செயல்தாம் ஐந்தினையும்
செப்பும் வேத ஆகமங்கள்
மையல் போக்கும் மருந்தாகும்
மறவா உண்டு மகிழ்வோமே. 45

மகிழ்வோம் நாம்போய் சிவபுரத்து
மன்னன் கருணைத் தேனுண்டுத்
திகழ்வோம் திரும்பப் பிறவாது
தேவ தேவன் திருத்தாளைப்
புகழ்வோம் புனிதன் சீர்பாடி
புன்மை தவிர்ப்போம் இவ்வுலகில்
இகழ்வார் கோடி எண்ணம்போல்
ஏத்திப் பணிவோம் சிவன்கழலே. 46

கதிரோன் கடமைத் தவறாதே
காலம் முழுதும் எரிவதனைப்

புதிராய்க் காண்பர் புண்ணியர்காள்
புரமூன் றெரித்தான் திருவடியை
எதிராய் கண்டுக் கரங்கூப்பி
இதயக் கமல நாயகனே
பதியே யெந்தன் மலமறுத்து
பாதம் தருவாய் வாழ்வதற்கே. 47

வாழும் நாளை உணராதே
வையம் பிறந்தார் செய்கையினை
வீழி மிழலை நாயகனார்
வீட்டக் காண்போம் நொடிப்பொழுதில்
காழி நகரில் அவதரித்தோன்
காட்டும் நெறியில் வாழ்வார்க்கு
வீழும் நிலைமை வாராதே
விமலன் காப்பான் வாய்மையதே. 48

போற்றிப் பணிவேன் நின்னடியே
புலியூர் சிற்றம் பலநாதா
ஆற்றல் மிக்கோய் அவிர்சடையா
அவலங் காண்பாய் நின்னருளே
வேற்றுச் சமயர் இகழ்திடுவார்
விரும்பித் தொழுவார் நின்னடியார்
காற்றாய் நிறைந்தாய் யெம்பெருமான்
கயிலை அகலா நிலையருளே . 49

கயிலை மலைவாழ் யெம்பரனே
காவாய் இனிநான் பிறப்பின்றி
குயிலாய்ப் பணிந்த இந்திரனின்
குற்றம் களைந்தப் பெரியோனே
மயிலாய் யேத்தி வழிபட்டாள்
மலையான் மகளார் உமைநங்கை
தயிரில் நெய்யாய் திகழ்வேனே
தமியேன் தனிமை தீர்த்தருளே. 50

தீராப் பெருநோய் பிறப்பிறப்பை
தீர்ப்பாய் யெந்தைப் பெருமானே
போராக் காலம் யென்தனக்கு

புரிந்தே னிந்தத் துயராலே
சீராற் கயிலை மலைக்கரசே
சிற்றம் பலத்துள் நடமாடும்
ஆரா அமுதே திருவடிக்கீழ்
அடியேன் வாழ அருளுதியே . 51

அருளா லுயர்ந்தார் அடியார்கள்
அல்லற் பிறவித் தனையுணர்ந்து
பொருளா லுயர்ந்த புனிதாநின்
பொற்றாள் போற்றி நாடோறும்
இருளை அடக்கி நீர்சுமந்து
இன்பத் திருத்தாள் பணிந்தேத்தி
மருளா மனத்தர் சடம்படாத
மாண்பை உற்றார் கண்டேனே . 52

முகக்கண் போதா யென்தனக்கு
மூவா முதல்வா நான்மறையா
நகக்கண் தருக எனவேண்டி
நாளும் நின்தாள் பணிந்தேத்த
அகக்கண் ஆசை முடித்தனையே
அண்ணல் புலிக்கால் முனிவருக்கே
பகற்கண் பலிதாம் பெறுவோனே
பாதம் அகலா இடந்தருகே. 53

நித்தா நிருத்தா நீள்சடையா
நீதி நான்கு மறையோனே
முத்தா மூன்று விழியோனே
மூவா சூலப் படையானே
அத்தா அகிலம் காப்போனே
அடியார் நெஞ்சம் அமர்ந்தோனே
செத்துப் பிறக்கும் நிலைமாற்றி
சிறியேன் பவத்தைத் தீர்ப்பாயே. 54

பாதம் பணியும் பத்தரெல்லாம்
பழைய வினையை நினைந்திடுவார்
வேதம் சொல்லும் விதிமுறையில்
விருப்பம் கொள்வார் முப்பொருளின்

போதம் கேட்பார் தெளிவுறுவார்
புன்மை தவிர்த்து நன்னெறியில்
மீதக் காலம் கழித்திடுவார்
மின்னார் சடையன் அடியாரே . 55

அடியார் தங்கள் உடம்பதனில்
அண்ணல் பூசும் திருநீற்றை
விடியும் முன்ன ரீரெட்டாய்
விரும்பி அணிவார் நாடோறும்
துடிகொள் இறையோன் நம்பெருமான்
துதிப்பார் துயரம் தீர்த்திடுவான்
செடிகொள் யாக்கை இதுமாய்க்கச்
சிவனே கதிதாம் உணர்ந்தேனே. 56

துயரம் காட்டும் வாய்மையினைத்
தொட்டுப் பார்மின் நொடிப்பொழுதில்
அயரா உழைப்பின் வலிமையெலாம்
அற்றுப் போகு மறிவீர்காள்
செயலால் வாக்கால் சேர்த்தவினை
சிற்றம் பலவன் கூட்டுவிப்பான்
மயலை மாற்றி மலரடிக்கீழ்
மன்னும் செயலைச் செய்வோமே. 57

செய்வோம் நாம்போய்ச் சிவபுரத்தில்
சிறியே னென்ற நினைவோடு
கொய்வோம் மலர்கள் பூசனைக்கு
குற்றம் இல்லா மகிழ்வோடு
உய்வோம் மடமை மருள்நீங்கி
உமையாள் கேள்வன் திருவடியை
கைகள் கூப்பித் தொழுதெழுவோம்
காலம் கடந்த நிலைவாழ்வே. 58

தருவாய் சிவனே முத்திநிலை
தமியேன் தனிமை தீர்தருளே
வருவாய் ஆலம் உண்டோனே
வள்ளல் எந்தன் முழுமுதலே
திருவாய்த் திகழும் திருவடியை

திருந்த வைமின் யென்தலையில்
கருவாய்ப் பிறந்தக் கடுதுயரம்
கண்டேன் இனியும் வேண்டாவே. 59

வேண்டும் முத்தித் தந்தருள்வாய்
விகிர்தா விடைமேல் அமர்வோனே
யாண்டும் உமக்கே வழியடிமை
யெம்மான் உரைத்தேன் விண்ணப்பம்
பூண்டேன் சின்னம் சிவனேயென்
புன்மை நீக்கிக் கருணையினால்
ஆண்டா னடிமை நினைவோடு
அடியேன் உய்ய அருளுதியே 60

நாவின் பயனை யுணராரும்
நன்றி கொன்ற தன்மையரும்
சேவித் தறியா மனத்தாரும்
செயலின் பயன்கள் காணாரும்
ஆவி அறிவை ஆயாதே
அகந்தைப் பிடியுள் கிடப்போரும்
பாவி என்னும் பதம்பெறுவர்
பரமன் பாதம் பணிமினே. 61

நம்மின் வேறாய் பேராற்றல்
நடுவாய் நிற்கக் காண்மின்காள்
மும்மைப் பயனேப் போகமென
முடிவைக் காண்மின் முத்தமிழில்
செம்மை காட்டும் காழியர்கோன்
சிவன்தன் பொற்றாள் பதம்பெற்றார்
இம்மைப் பெற்ற நற்பயனாற்
இறுகப் பற்று சிவக்கழலே. 62

அறியேன் அடியேன் முன்னம்செய்
அரியத் தவத்தால் சைவநெறிச்
தெரியச் செய்தான் தென்னாடன்
தில்லை மூதூ ரம்பலவன்
கரிய கண்டன் கண்ணுதலான்
கருணை கடலான் பெண்பாகன்

சிறியேன் பிறப்பை அறுத்தெரிந்து
　　சிவமாம் தன்மை அருளுவனே. 63

போக்கும் வரவும் இல்லானே
　　புலியின் தோலை அசைத்தோனே
ஆக்கிக் காக்கும் பரம்பொருளே
　　அரசாய் ஆல்கீழ் அமர்ந்தோனே
வாக்கும் மனமும் நின்னடியே
　　வாழ்த்தும் அடியார் உடனாக
ஆக்கை நீக்கும் நெறியதனில்
　　அடியேன் செல்ல அருள்வாயே . 64

அருவம் உருவம் அருவுருவம்
　　அனைத்தும் நிந்தன் திருவுருவே
முறுவல் முகத்துப் பெருமானே
　　முக்கண் முனிவாப் பரஞ்சோதி
திருவாய்த் திறந்து வருகவென
　　தேவே அழைப்பாய் தாள்நிழற்கீழ்
தருவாய் முத்திப் பேரின்பம்
　　திளைக்கச் செய்வாய் பரபரமே . 65

ஏதும் விரும்பான் யெம்மிறையோன்
　　ஏழையோர்ப் பாகன் யிறப்பிலியன்
தீதும் நன்றும் புரிவார்க்கே
　　திருந்தக் கொடுப்பான் பிறப்பிறப்பு
காதுங் கண்ணும் தந்தபிரான்
　　கலையைக் காட்டி வினையறுப்பான்
போதும் நீரும் புண்ணியர்காய்
　　போற்றிப் பணிமின் சிவக்கழலே. 66

அறுக்க வல்லான் என்பிறப்பை
　　ஆதி அந்த மில்லாதான்
பொறுக்க வல்லா னென்பிழையை
　　போக்கும் வரவு மில்லாதான்
துறக்க வல்லா னென்வினையை
　　தூக்க மில்லாத் தூயவனான்

சிறக்க வல்வான் சிவபுரத்து
செல்வன் பாதத் திருவருளே. 67

நடுவு நிற்பான் நல்லாற்றான்
நானென் றுரையான் பொதுவானான்
விடிவு காட்டும் வேந்தனவன்
விடையொன் றேறி வலம்வருவான்
முடிவு செய்வான் முழுமுதலான்
முக்கண் அப்பன் பரஞ்சோதி
படிமப் பாதம் துணைநமக்கு
பத்தி செய்குப் பரம்பெறவே. 68

சிறந்தார் பற்றும் சிரபுரத்தோய்
சிரித்தே யெரித்தாய்ப் புரமூன்றை
அறந்தா னுரைத்தாய் ஆலின்கீழ்
அல்லல் தீர்க்கும் நல்லோனே
திறந்தான் அறிவா ருலகில்லை
திருத்தாள் தொழுவே அருள்புரிவாய்
நிறந்தா னைந்து உடையேனே
நிமலா யென்னைக் காவாயே . 69

நிமலா நிருத்தா நீள்சடையா
நிலம்நீர் நெருப்பு வளிவெளியாய்
அமலா அடியார் பிறப்பறுக்கும்
அரசே உமையா ளொருபாகா
கமலச் சேவடிக் கண்ணுதலா
கருதாச் செயலை முடிப்போனே
சிமில விடையாய் யெம்பரனே
சிறியேன் பற்றத் தாள்தருகே. 70

கருணை உருவே சிவபெருமான்
காட்சிக் கெளியாய் தொல்லுலகில்
பொருளைத் தேடும் இருளர்க்கு
பொல்லாப் பொருளே நின்னடியின்
அருளை நாடும் அடியார்க்கு
அன்பின் வலையில் படுவோனே
உருளும் உலகிற் பிறக்காதே

உந்தாள் வைப்பாய் யெந்தனையே . 71

எந்தாய் சிந்தைக் கவர்ந்தோனே
ஏழைப் பாகாக் கயிலாயா
விந்தை இந்த வியனுலகில்
வேதம் நான்கை வளர்ப்போனே
அந்திப் பிறையை அணிந்தோனே
அல்லல் பிறவி அறுப்போனே
உந்தன் திருத்தாள் தொழுதெழுந்தேன்
ஊழி நடத்தும் நீற்றோனே. 72

அற்றான் கோப மம்பலத்தான்
ஆலின் கீழாய் அறமுரைத்தான்
செற்றான் புரங்கள் மூன்றையுமே
சிரித்தே எரித்தான் கயிலாயன்
விற்றான் விறகு விளையாட்டாய்
வீதி நடந்தான் தூதுவனாய்
உற்றான் நமக்கு உறுதுணையாய்
உதவுங் குணத்தான் உமைப்பதியே. 73

உதவுங் குணத்தான் உமைப்பதியான்
உண்மை பொய்மை காட்டுவிப்பான்
கதவுந் திறக்க அருள்புரிந்தான்
கரியி னுரியைப் போர்த்தபிரான்
முதலும் முடிவு மில்லாதான்
முற்று முணர்ந்ப் பரஞ்சோதி
நிதமும் நடத்தும் ஐந்தொழிலை
நினைவார் பிறப்பை அறுப்பானே 74

அன்பால் நின்பா லழைத்தனையே
அண்ணா மலையி லமர்ந்தோனே
துன்பப் பிறப்பை யுணர்ந்தேனே
துணைநின் கருணைத் திருவருளால்
என்பும் எருக்கும் விரும்பியவா
இரவும் பகலும் இல்லாத
இன்பம் தருசீர் இணையடிக்கீழ்
இடம்தாப் பெரியாய்ப் போற்றியதே. 75

போற்றிப் போற்றி நின்பாதம்
புகுதப் பெறுவேன் போற்றியதே
காற்றும் கனலும் வெளிநீராய்க்
காணப் பெற்றேன் கைதொழுதேன்
நீற்றை நிறையப் பூசியவா
நினைவார் நெஞ்ச மகலோனே
கூற்றன் வருமு னென்னுடைய
கொள்கை முடிப்பாய்க் கண்ணுதலே. 76

காண்டற் கரியான் கண்ணுதலான்
கருத வருவான் தான்தோன்றி
வேண்டத் தக்க தறிந்திடுவான்
விருப்பம் முடிப்பான் அடியார்க்கு
ஆண்டா னடிமை திறத்தார்க்கு
அடையத் தக்க இடந்தருவான்
தூண்டா விளக்கை நாள்தோறும் து
திப்பாய் நெஞ்சே துணைநமக்கே 77

நாயிற் கடையேன் யென்தன்னை
நயந்து ஆண்டப் பெரியோனே
ஆயாக் கிடந்தேன் பலவூலி
அத்தா செத்துப் பிறந்திளைத்தேன்
தாயின் மேலாம் நின்கருணை
தயவை நாடித் திரிகின்றேன்
மாயப் பிறவி அறுத்தென்னை
மலற்றாள் வைப்பாய்க கண்ணுதலே . 78

கண்கள் மூன்று உடையோனே
கயிலை மலைவாழ் ஆதியனே
பெண்க ளெமக்குத் தாயாவர்
பிறப்பை யுணர்ந்த நாயேனை
மண்ணிற் பிறவா காப்பாயே
மருவார்க் கொன்றை அணிந்தோனே
அண்ணல் நின்தாள் இடந்தருவாய்
அலைசேர் கங்கைச் சடையோனே 79

சுட்டிக் காட்ட யியலாதே
சொல்லா லுரைக்க இயலாதே
எட்டு மிரண்டும் கடந்தானை
எள்ளு ளெண்ணை போலானை
கட்டி இழுக்க இயலாதே
கயிலை மேயக் கண்ணுதலான்
எட்டி நிற்பான் உள்ளுறைவான்
இருகை கூப்பித் தொழுவோமே. 80

தொழுவோம் நாம்போய்ச் சிவபுரத்தே
தொல்லைப் பிறப்பு ஒன்றின்றி
வழுவா நெறியில் வாழ்வோமே
வள்ளல் வழங்கும் கருணையினால்
மழுவொன் றேந்தும் மன்னவனார்
மறுமை இம்மைத் திறங்காட்டி
நழுவா வண்ணம் காப்பானே
நன்றி நினைவாய் நன்நெஞ்சே.
81

சொல்லி வளர்ப்பீர் பிள்ளையினை
சொல்லில் அடங்கா இறையோன்சீர்
செல்லாய் யென்பீர் சிறுநெறிகள்
சிற்றம் பலத்து நாதனவன்
நில்லா ஆடும் நாடகத்தை
நினைவாய்ப் பிறவித் துயர்நீங்கி
நல்லார் வாழும் சிவபுரத்தில்
நாம்போய் வாழ்வோம் என்பீரே. 82

வேண்டிப் பெற்றப் பிள்ளைக்கு
விமலன் அருளை முகங்காட்டி
தூண்டில் செய்கை சிறுநெறிகள்
துணையே யென்பர் சேராதே
காண்டல் கருதல் ஆகமங்கள்
காட்டும் வாய்மை கண்டுணர்ந்து
ஆண்டா னடிமைத் திறம்மிகவார்
அடையும் நகர்போய் வாழ்வோமே. 83

உடலுள் ஞூறுப்பை இயக்கிடுவான்
உடனா யிருந்தும் தனைக்காட்டான்
மடலில் பாடல் எழுதியவன்
மான்கை யேந்தும் மணவாளன்
கடலின் நஞ்சை உண்டபிரான்
கயிலை மலைவாழ் கண்ணுதலான்
திடலில் நடனம் பயின்றிடுவான்
திருத்தாள் தொழுவோம் வாழ்வுறவே. 84

தூங்கு முயிரை எழுப்பிடுவான்
தூங்கா நின்று நமைக்காப்பான்
ஏங்கு முயிரின் தேவைகளை
எளிதாய் முடிப்பான் மிகவிரைந்து
தீங்கைத் தடுக்கும் வேந்தனவன்
திருந்தக் கொடுப்பான் பிறப்பிறப்பு
தாங்குந் தலைவன் சிவன்தாளை
தங்கப் பணிவோம் வாழ்வுறவே. 85

கொன்றை சூடும் பெருமானை
குளிருங் கங்கை கொண்டானை
நன்றாய் நடனம் பயில்வானை
நடுவாய் என்றும் நிற்பானை
கன்றாப் புலியூர் மேயானை
கயிலை மலையின் கண்ணுதலை
இன்றேப் பணிமின் இருவினைநோய்
இல்லா வாழ்வீர் சிவபுரத்தே. 86

மத்தம் சூடும் மறையானை
மாற மறைகள் தருவானை
மொத்த உலகும் படைத்தானை
மூவா மருந்தாய்த் திகழ்வானை
நித்தன் நிமலன் நீள்விசும்பை
நினைவார் நெஞ்ச மகலானை
சித்தம் சிதறா அன்போடு
செந்தாள் சேர எண்ணுமினே 87

அறுப்பான் பிறப்பை சிவனென்று
ஆய்ந்தா ருரைப்பச் செவிகட்டாய்
திறப்பான் ஞானக் கண்ணதனை
திருந்தச் செய்வான் பலவகையால்
மறப்பார்க் குள்ளும் மறைந்திருந்து
மாற்றஞ் செய்வான் மனந்திருந்தி
சிறப்பாய் நீயுஞ் சிந்தித்தே
சிறந்தே பற்று சேவடியே.
89

அந்தம் ஈதெ னறிவிப்பார்
அவர்சார் சமயக் கொள்கையினாற்
சொந்தங் காட்டிச் சொல்காட்டி
சுடரா னொருவன் திறங்காட்டி
பந்தம் காட்டி பழவினையின்
பரிசுங் காட்டிப் பதங்காட்டி
வெந்த நீற்றின் திறங்காட்டும்
வேதன் விகிர்தன் சமயமிதே. 90

சமயக் குரவர் நால்வரொடு
சந்தா(னக்) குரவர் நால்வரையும்
அமையத் தந்தான் அருமறையன்
அவனின் பெருமை நம்பெருமை
இமையா முக்கண் சிவன்தாளே
இறவாப் பிறவா அருமருந்து
உமையொர் பாகன் நமையாளும்
உண்மை யுணரப் பெற்றோமே.
91

விழியாற் பேசும் திறமுடையான்
விமலன் வேதத் திருவாயன்
அழியா அறங்கள் காத்திடுவான்
அதனின் புறமும் சொன்னபிரான்
பழியாக் கலைகள் காட்டுபவன்

பண்சேர் பாடல் பாடிடுவான்
நலியா வண்ணம் வாழ்வதற்கு
நாதன் திருத்தாள் துணைகாணே. 92

அடுத்துப் பெறுவ தெப்பிறப்போ
அரனே அறிவா னாமறியோம்
கொடுத்தக் குடியில் .குற்றமிலாக்
கோணாச் செங்கோல் கொண்டனையோ
படித்தப் படிப்பின் வாய்மையினை
பாடம் காட்டி வாழ்ந்தாயே
எடுத்த பாதம் தொழப்பெற்று
இறப்பைத் தவிர்க்க முயல்வோமே. 93

அல்லும் பகலும் நில்லாதே
ஆடும் பரமன் திறமறிவாய்
கல்லைக் கனியாய் ஆக்கிடுவான்
கற்றைச் சடையான் பெண்பாகன்
கொல்லும் புலியின் தோலுரித்துக்
கொண்டான் உடையாய் இடையின்மேல்
வல்லோன் வாழும் இடஞ்சென்று
வணங்கி வாழ்த்தப் பிறப்பறுமே. 94

முடிந்த முடிபின் வழிசென்று
முத்தி யொன்றேக் குறிக்கோளாய்
கடந்த காலம் கருதகிலேன்
கருணைக் கடலான் கண்ணுதலான்
அடிமே லாசை வைத்தனனே
ஆடும் கூத்தா நாயேனை
கொடிதாம் பிறப்பு யினிவேண்டா
கோனே கழலின் துணையருளே. 96

எடுத்துச் சொல்ல இயலாதே
இறையோன் தாளின் பேரின்பம்பம்
கொடுத்துச் சுவைக்க யியலாது
கோமரன்.அருளின் பெருமையதே
தடுத்து நிறுத்த. இயலாது

தாமே தனக்கு அதிகாரம்
விடுத்துச் செவ்ல இயலாது
விகிர்தன் கலந்தத் தன்மையதே. 97

அறமே உருவம் விடையதன்மேல்
அமர்ந்து அகிலம் படியளப்பான்
புறமே செல்லான் எப்பொழுதும்
புதுமை செய்யப் படைத்திடுவான்
மறமே ஆற்றல் அளவில்லை
மறுமை இம்மை இல்லாதான்
திறமே அவன்தாள் பரவுதலே தி
ரும்பப் பிறவா வாழ்வதற்கே. 98

ஞால முய்ய நால்வேதம்
நவின்ற நம்மான் மொழிகேட்டு
சீலங் கொண்ட வியாசமுனி
செய்தார் உருவம் யெழுத்தாக
ஆலம் உண்ட கண்டத்தன்
அடியை பரவும் அன்பர்காய்
மூலம் மாற தந்தனரே
முக்கண் அப்பன் திருவருளே. 99

நாகம் பூண்ட. நம்பெருமான்
நாவற் சொன்ன ஆகமங்கள்
வேகம் தடுக்கும் வினைதடுக்கும்
வேண்டா ருறவை புறந்தள்ளும்
பாகம் பெண்ணைக் கொண்டபிரான்
பாதம் காட்டும் பரமுத்தி
தேகம் காட்டும் தெளிவுறவே
தினமும் போற்றிப் பணிவாயே.
100

**திருச்சிற்றம்பலம்**

பொல்லா வினையை யெண்ணிப்பார்
போக்கும் வரவு மதன்பரிசே
நல்லா னொருவன் நமையாளும்

நாதன் அவன்தன் விளையாட்டு
இல்லா இடமில் ஆயிடினும்
இறப்பே யில்லா ஓரிடங்கேள்
கல்லா ஐமர்ந்தான் கழலடியே
கவலை போக்கும் மருந்ததுவே . 1

கவலை பிறப்பு பெருந்துயரம்
கால மெல்லாம் நமைவாட்டும்
சவலைப் பிள்ளைப் போல்வாழ்கை
சார்பை அறியாப் பிறப்பிறப்பு
சிவன்தன் அருளைப் பெற்றக்கால்
திரும்பப் பிறவாப் பேரின்பம்
அவன்வாய் மொழியின் நெறிபற்றி
வாழ்ந்தாற் பெறுவாய் முத்தியதே. 2

உண்ணு முணவை உமக்கென்று
உமையாள் பாகா வுன்னமுதாய்
எண்ணித் தீர்ப்பேன் பசிதனையே
எருதில் ஏறும் பெருமானே
கண்ணின் மணியே கறைகண்டா
காமன் காய மெரித்தோனே
எண்ணும் நாயேன் பிறவாது
இணைதாள் வைப்பாய் நாயகனே. 3

காணுங் காட்சி உண்மையெனக்
கருதி திரிந்தோம் நாமெல்லாம்
நாணாச் செய்தோம் தீவினைகள்
நன்மை தீமை யுணராதே
வேணி முடித்த விகிர்தனையே
விரும்பித் தொழுவோம் பத்தியினால்
தாணு அவன்தன் பெருங்கருணைத்
தயவாற் பெறுவோம் பிறவாமை . 4

தனக்கோர்த் தடங்கல் வந்தனைந்தால்
தகர்க்குங் குணத்தைக் கொண்டோமே

மனத்தை அடக்கும் திறமில்லோம்
மறுமை நினைந்து வருந்தகில்லோம்
வனத்தில் வாழும் புலியின்தோல்
வாங்கி அரையி லசைத்தபிரான்
தனக்கோர் தலைவ ரில்லாதான்
தயவாற் பெறுவோம் பிறவாமை. 5

பணத்தைச் சேர்க்கு மாசையினில்
பண்பை மறந்தத் தன்மையராய்
குணத்தை மாற்றாச் செருக்கோடு
குற்றஞ் செய்து வாழ்கின்றோம்
கணங்கள் போற்றுங் கயிலாயன்
கமலத் திருத்தாள் சீருணர்ந்து
மணங்கொள் மலராற் துதித்தேத்தி
மலர்தாள் பெறுவோம் பிறவாமை . 6

வாழும் நாட்கள் கணக்கறியோம்
வணங்கி நில்லோம் வஞ்சகமாய்
ஆளும் மனத்தைக் கொண்டோமே
ஆன்றோர் நம்மை இகழ்வாரே
மாலும் அயனும் காணகில்லா
மன்னன் கயிலை மலையானின்
நீளும் மலர்தாள் பணிந்தேத்தி
நித்தம் பெறுவோம் பிறவாமை . 7

இருட்கண் ணுடையார் கதிரோனை
இல்லை என்பார் அந்தகர்கள்
பொருட்கண் ணுடையார் புண்ணியரை
பொய்ய ரென்பார் புறஞ்சொல்லி
அருட்கண் ணுடையா ரறிவாரே
அண்ணல் திருத்தாள் பெருமையினை
தெருட்கண் ணுடையார் தினந்தோறும்
திருந்தப் பணிவார் அரனடியே . 8

மருளை மாற்றும் மருந்தொன்று
மண்ணில் நிறைவாய் படர்ந்திருந்தும்
பொருளைத் தேடும் நோக்கத்தில்

புறமே போவார் புத்தியிலார்
அருளை வழங்கும் ஆதியிலான்
ஆடும் ஆட்டம் அறிந்தவர்கள்
இருளைக் கெடுத்து இறப்பில்லா
இன்பம் பெறவே துணிவாரே. 9

இளமை வாழ்வு எத்தனைநாள்
எண்ணிப் பார்மின் கணக்கிட்டு
புலமை மிக்கோர் பதிலுரைப்பர்
புனிதன் சிவன்தன் அருளென்றே
பழமை மாற்றாப் புதுமையினன்
பாரோர் போற்றும் கயிலாயன்
கழலைப் பணிமின் கவலையற
கல்விப் பயனைக் காணுமினே. 10

அழியா இன்பம் ஏதென்று
அறியப் புகுமின் பகுத்தறிவால்
பழியே யில்லா அறச்செயல்கள்
பழகிப் பார்மின் பெருவீரம்
கழியா வினையைக் கழித்திடுமின்
காலங் கடத்தா இப்பொழுதே
வழியாய்ப் பெற்ற சைவநெறி
வாழ்த்திப் போற்றல் முத்தியதே. 11

உரிமை பெற்றேன் இவ்வுலகில்
உமையோர் பாகன் திருவடியை
பெருமை மிகவாற் பேசுவதும்
பெய்தா ளமுத முன்னுவதும்
அருமை யருமை யவன்சீரை
அரற்றித் திரிவார் கூட்டுறவும்
கருமை கண்டன் கண்ணுதலான்
கருணைத் திறத்தை கண்டேனே. 12

விரும்பிச் சேர்ந்தோம் இருளோடு
வினையைச் சேர்த்தோம் மருளோடு
துரும்பின் சிறிதே உயிரளவு

துள்ளித் திரிந்தோம் பொருளோடு
கரும்பின் சுவையான் கண்ணுதலான்
கற்றார் மனத்தை விட்டகலான்
இரும்பின் நிலையாய் வாழாதே
இணைதாள் பற்றி வாழ்வோமே. 13

கல்லா நின்றக் கடையேனை
காதல் மிகவாற் கருணையினற்
சொல்லாற் செயலாற் நன்குணர்த்தி
சுத்தன் சோதி சிவக்கொழந்து
இல்லா யிடங்கள் இல்லையினும்
இனித்தக் கோவி லுட்புகுந்து
வல்லாய் நிந்தன் மலர்ப்பாதம்
வாழ்த்தப் புரிவாய் உதவியதே.
14

எண்ணி லடங்கா உதவிகளை
என்றும் செய்யும் கண்ணுதலா
மண்ணில் மறைகள் தருநீதி
மதித்தே னல்லேன் பலபிறவி
கண்ணில் ஒளியை வைத்தோனே
கடலின் நஞ்சை உண்டோனே
எண்ணித் தொழுவேன் நும்பாதம்
இறவா முத்தித் தருவாயே. 15

அழியாப் பொருளோ மூன்றேயாம்
அறிவீர் பதியும் பசுபாசம்
பழியே இல்லான் பதியாவான்
பசுவோ கேட்கின் நாமேயாம்
விழியாற் காணும் பொருளெல்லாம்
வேண்டாப் பாசச் சடப்பொருளே
கழியாப் பிறப்பை கழிப்பதற்கு
கடவுள் பாதம் தொழுவோமே. 16

**விளம்மாகாய்விளம்மாகாய் திருச்சிற்றம்பலம்**

வலுவது குன்றா வாய்மையதும்
வளமதுங் குறையா நேர்மையதும்
சலசல நாவும் நோகிடுமே
சங்கரன் பாதந் தேடிடுமே
குலவுவார் லீலைக் குறைவுருமே
குற்றமே கண்டு மனஞ்சுடுமே
பலவுமாய் எண்ணிப் பயங்கொளுமே
பரமனின் திருத்தாள் யேத்துதியே. 2

ஏத்துவாய் யென்றுஞ் சிவக்கழலே
இணையடி நிழலேப் பேரின்பம்
நாத்தழும் பேற அஞ்செழுத்தை
நளுமே நவின்று களிப்புறுவாய்
பூத்திகழ் சோலைப் புதுமலரால்
பூசனைச் செய்துப் போற்றிசைப்பாய்
பாத்திரம் கண்டு பல்லோரும்
பழகிட வருவார் நன்நெஞ்சே. 3

மங்களப் பொருளாய்த் திகழ்வோனே
மாவரைக் கயிலை வாழ்பதியே
திங்களை வாழச் செய்தோனே
**தில்லையில் கோயில் கொண்டோனே**
எங்களின் பாச இருள்நீக்கும்
இறைவனே பெண்ணோர் பாகத்தோய்
செங்கரப் படைகொள் தந்தையே
தூக்கியத் திருத்தாள் தனிப்பொருளே. 4

தனியொருப் பொருளே தான்தோன்றி
தன்மையை யுணரார் பேதையர்கள்
மனிதரும் மற்றைப் பிறந்தோரும்
மலரடித் தொழவே கண்டோம்நாம்
பனிவரைக் கயிலை பரஞ்சோதி
பசுபதி யுந்தன் பெருங்கருணை

நனிதவ மியற்ற அருளியதே
        நம்பனே நெஞ்ச மமர்ந்தோனே. 5

நினைவுளே நிறுத்த மறவாதீர்
        நிமலனின் நாம மைஞ்செழுத்தை
அனைவருஞ் சொல்லத் தகுதியரே
        ஆயினுந் தீக்கை நல்லுரிமை
புனைவரே புதியத் திருநாமம்
        புண்ணியன் சிவன்தன் திருவருளாற்
வினையது பெருக்கா வாழ்வார்கே
        வீடெனு முத்தி எய்திடுமே. 7

**விளம்மாகாய்விளம்மாகாய் திருச்சிற்றம்பலம்**

தூயவன் சிவனே இறையாவான்
        துதிப்பவர் வினையை தீர்த்திடுவான்
பேயொடு ஆடும் பிறப்பிலியன்
        பித்தனாய் திரிவான் இடுகாடு
நாயொடு காட்டில் நடைபயின்று
        நாடகம் செய்தான் அருச்சுனர்க்காய்
வாயொடு பிறந்தோம் நாமவன்சீர்
        வாழ்த்தியே பணிவோம் புண்ணியமே. 1

மூவிலைச் சூலம் கரமுடையான்
        முத்தமிழ் சங்கப் பெருந்தலைவன்
நாவினாற் மறைகள் நான்குரைத்தான்
        நாநில முழுதும் படியளப்பான்
காவிசேர் கண்ணா ளொருபாகன்
        கன்றாவின் ஐந்தை உகந்தேர்ப்பான்
பூவிரிக் கொன்றைத் தார்மார்பன்
        பொன்னடிப் பரவல் புண்ணியமே. 2

அலைகடல் நஞ்ச முண்டகண்டன்

ஆமையின் ஓட்டை யணிமாரபன்
கலைநிலா வளரும் கருணையினன்
காலனைக் காலாற் உதைத்தபிரான்
மலைமகள் நடுங்க இராவணனை
மலையதன் கீழாய் அடர்த்தபிரான்
இலைமலர்க் கொன்றை வேந்தனவன்
இணையடி யேத்தப் புண்ணியமே 3

பன்றியின் கொம்பை அணிந்தபிரான்
பசுபதி வெந்த நீறணிந்தான்
கன்றுமா னேந்தும் திருக்கரத்தன்
காமனை யெரித்த கண்ணுதலான்
நன்றுநால் மறைகள் தந்தபிரான்
நாரணன் காணாத் திருவடியான்
சென்றுகைத் தொழுவா ரிடர்தீர்ப்பான்
சேவடித் தொழுதல் புண்ணியமே 4

காப்பதுங் கரந்தும் விளையாட்டாய்
கண்ணுதற் கடவுள் நம்பெருமான்
பூப்பது முடிப்பன் புதுமையிலை
புரங்களை எரித்தான் புன்சிரிப்பாற்
ஆப்பினுள் பட்ட குரங்கினைப்போல்
அல்லலில் அழுந்த மாட்டாதே
வாய்ப்பினை உணர்ந்து அரனடியே
வணங்கிடத் துணிமின் புண்ணியமே
5

கொன்றையும் மத்த மலரணிவான்
கூவிள வன்னி தழையணிவான்
வென்றவர்ச் சுடலைப் பொடியணிவான்
விகிர்தனார் வேதக் கோவணத்தான்
என்றுமே இறவான் பிறப்பிலியான்
ஏதமொன் றில்லான் இடரில்லான்
அன்றொரு ஆல்கீழ் அறமுரைத்தான்
அடியினைப் பரவல் புண்ணியமே. 6

நஞ்சணி கண்டன் வெண்நீற்றன்
நரகொடு சுவர்க்கம் சமைத்தபிரான்
வெஞ்சின விடையன் திரிசூலன்
விண்திரி புரங்கள் செற்றபிரான்
துஞ்சிருள் வேளை நடம்பயில்வான்
தூமதிப் பிறையை வளர்வித்தான்
அஞ்சலி செய்யான் ஆர்பரியான்
அவனடி பணிதல் புண்ணியமே. 7

பண்ணிசைப் பாடல் பாடிடுவான்
பலிக்கென இல்லம் சென்றிடுவான்
விண்ணுறை தேவர் வாழ்ந்திடவே
விடந்தனை யுண்டான் கயிலாயன்
பெண்ணொரு பாகன் பிறப்பிலியன்
பிணஞ்சுடு காட்டில் நடம்பயில்வான்
கண்ணொரு நெற்றிக் கொண்டபிரான்
கழலடி போற்றல் புண்ணியமே.
8

சாத்திரம் சொல்ல ஆலமர்ந்தான்
சதுர்மறை நான்கும் வாய்மொழிந்தான்
மாத்திரைப் பொழுதில் வந்தனைவான்
மதுமலர்க் கொன்றைத் தார்மார்பன்
பூத்திகழ் அயனும் மாலவனும்
போட்டியிற் தோற்க வளர்ந்தபிரான்
ஆத்திர மில்லான் அறுசமயன்
அவனடிப் போற்றல் புண்ணியமே . 9

எண்குண வல்லோன் ஈடில்லான்
இன்பமே யென்றுந் துன்பமில்லான்
வெண்ணிற விடையின் மேலமர்வான்
விச்சது யின்றி விளைவிப்பான்
எண்ணிலி உயிர்க்கும் தலைவனவன்
இறப்பிலி யென்றும் பிறப்பில்லான்
கண்ணுதற் கடவுள் கனிமதுரன்

கழலடித் தொழுதல் புண்ணியமே. 10

**காய் மா காய் காய் மா காய்**

வாரணத்தின் தோலை உரித்தபிரான்
வணங்காத தலையைப் பெற்றபிரான்
பூரணனாய் புலியூர் நடம்பயில்வான்
புகழ்சியையும் இகழ்சி கடந்தபிரான்
காரணனாய் கருத்துள் நிறைந்தபிரான்
காற்றாகி யெங்கும் கலந்தபிரான்
நாரணனும் அயனும் தேடிநிற்கும்
நம்பெருமான் பாதம் போற்றுமினே. 1

காணாமற் காணுங் கண்ணுடையான்
கருதாமற் முடிக்கும் திறனுடையான்
பேணாமற் பேணும் கருணையினான்
பெயராமற் பெயரும் திருவுடையான்
தூண்டாமற் தூண்டும் துணையாவான்
தூங்காமற் காக்குங் பண்புடையான்
வேண்டாமல் வேண்டும் பொருளாவான்
விகிர்தனவன் பாதம் போற்றுமினே. 2

ஆனந்தக் கூத்தன் அறுசமயன்
அவ்வவ்வப் பொருளாய் யாவர்க்கும்
தானந்த மில்லாத் தலைவனவன்
தரணியெலாம் படைத்தச் சதுர்மறையான்
தேனந்த மருளைத் யாவர்க்கும்
தெவிட்டாதே உன்னத் தந்தருள்வான்
மோனந்தம் காட்டும் மெய்யவனை
முப்போதும் போற்று முத்திக்கே . 3

முத்திக்கே வித்துப் பத்திநெறி
முப்போதும் வணங்குச் சிவனடியே
சித்திக்கும் வித்து சிவநாமம்

செய்கருமம் யாவும் அறச்செயலே
எத்திசையும் வசமாய் ஆக்கிடுமே
ஏனோர்க்கும் பொதுவே அரன்நாமம்
அத்திமுக அண்ணல் போற்றிசைக்கும்
அம்பலக்கூத் தனையே யேத்துவோமே. 4

எம்மானே யெந்தைப் பராபரனே
எருதுகந் தேறும் செம்பொன்னே
பெம்மானே பிறவாப் பெரியோனே
பெயர்பல கொண்டக் கற்பகமே
செம்மானே கயிலை மலைக்கரசே
சேவடி தலைமேல் தந்தருள்வாய்
அம்மானே ஆரூர்ப் பதிக்கரசே
அடிமலர்ப் பிரியா வரமருளே.
5

ஆளானேன் நாயே னறிந்துணர்ந்து
அடைக்கல கேட்டேன் பிறப்புணர்ந்து
நாளாகிப் போனேன் தெளிவுறவே
நன்மையொடுத் தீமைக் கண்டறியேன்
தோளேறக் கொண்டேன் திருநீற்றை
துணையாப் பெற்றே னஞ்செழுத்து
தாழாமே காப்பாய் தம்பிரானே
தந்தையெனக் கானாய் தயாபரனே. 6

தந்தையுமாய் தாயாய் யாவரையும்
தாங்கிடுவாய் அரனே கண்ணுதலா
சிந்தையுளே புகுந்தப் புண்ணியனே
சிக்கெனவே பிடித்தேன் பாதமலர்
வெந்தவெண்தூள் பூசும் விமலனேநான்
வியனுலகிற் பிறவாக் காத்திடுவாய்
அந்தமிலாப் பெம்மான் பேரின்ப
அடிநிழலில் நிலைக்க அருளுதியே. 7

சாத்திரக் கல்வி கற்பதற்குச்
சங்கர னருளே துணையாகும்
நாத்திகம் பேசும் நாடகரை

நன்னெறிச் சாரச் செய்துவிடும்
பூத்திகழ் பொய்கை புகச்செய்து
புண்ணிய பாவம் காட்டிவிடும்
மாத்திரைப் பொழுதில் மறுமையினை
மாற்றிடும் வழியைக் காட்டிடுமே. 8

மானேந்தி அப்பன் சிவன்தாளை
மாண்புடை யன்பர் பணிந்திடுவர்
ஊனேந்தித் திரியும் உண்மையினை
உணர்ந்திடு நெஞ்சே நீநாளும்
தேனேந்து மலரும் கூவிளத்தால்
திருவடி தொழுவாய் வாய்ப்பிதனாற்
வானேந்து வையக மிதுகடந்து
வாழ்ந்திடப் பெறுவாய்க் கயிலையதே. 9

அரையாடு நாகம் அசைத்தபிரான்
அங்கமும் வேதம் மலர்ந்தபிரான்
வரையாடு மங்கை யுடனாகி
வளர்த்தனன் அறங்கள் நாலெட்டு
கரையாடு வேலை விடமுண்டு
கருத்தனன் கண்டம் பெருவீரன்
உரையாடு நாவாற் சீர்பாடி
உய்ந்திடக் கொள்வாய் பொன்னடியே. 10

**விளம் விளம் காய் விளம் விளம் காய்**

கற்றிடச் செய்தனன் சிவஞானம்
கண்ணுதற் கடவுளர் நம்பெருமான்
புற்றிடங் கொண்டனன் புதுமையினன்
புகலிடங் காட்டினன் தன்பாதம்
வெற்றுடல் நீக்குவன் யென்னுடைய
வேண்டலை முடிப்பது தன்கடமை

மற்றொரு பற்றிலை வையகத்தில்
மறுமையைத் தவித்திட வேண்டுவனே. 1

நல்லனத் தீயன வினையிரண்டை
நாடொறு மியற்றுவன் அறியாதே
சொல்வதுஞ் கேட்பதும் சிவச்சொல்லே
சுவைத்திட மறுத்தனன அறியாமை
பல்வினைப் பயிற்றிடும் பரஞ்சோதிப்
பரமனைப் பணிந்தெழு பத்தருடன்
கல்வியில் உயந்தவை சிவஞானம்
கற்றிடச் செய்தனன் சிவக்கொழுந்தே.
2

முடியுடை வேந்தரும் முனிவர்களும்
மூப்பிலா நான்மறை வேதியரும்
கடிகமழ் போதொடு கனிவகையும்
கரங்களில் ஏந்தியும் வழிபடவும்
நெடுவுயர் மாலயன் காண்பறிய
நிருத்தனே நிமலனே நின்தன்னின்
அடிமலர்ப் பரவிட ஆவலுற்றேன்
ஆதரித் தருளிடு பெருமானே .
3

பெருந்துறை மேயவாப் புகலூரா
பிஞ்ஞகா இன்பமாப் பெருங்கடலே
அரும்பெரு மறைகளைத் தந்தோனே
ஆவடு தண்துறை ஈச்சரனே
கருமுகில் வலம்வரு கயிலாயா
காவிரித் தென்கரை அமர்தோனே
திருமகள் கேள்வனு மறியாதத்
திருவடி தந்தருள் பெருமானே .
4

குரைகழற் போற்றுதன் காரணத்தை
குவலய முணர்திடப் பலதுறைகள்
வரைமுறை வகுத்தனை வாழ்முதலே
வறுமையும் வளமையும் நின்னருளே

திரைகடல் பெருவிடம் உண்டனைபின்
திருவருள் புரிந்தனை யாவர்க்கும்
அரைதிகழ் புலியதல் அம்பலவா
அடியினைப் புகழ்ந்தனன் போற்றினனே. 5

உணர்ந்தவர் போற்றிடும் உத்தமனே
உண்மையும் பொய்மையுங் காட்டியவா
புணர்ச்சியைக் கடந்தநற் போகமேநின்
பொன்னடி இறைஞ்சிட அருளினையே
கணக்கிலாக் திருவுரு கொண்டடியார்
குறிப்பினைக் முடித்திடும் பெருமானே
இணங்கினன் நாயினன் இறவாதே
இருந்திட வணங்குவ னிணையடியே. 6

உற்றநல் லொருவனே கடவுளவன்
உமையொரு பாகனார்த் தெளிந்திடுவாய்ப்
பற்றிடு நெஞ்சமே பரிதவியாய்
பரவிடத் துணிந்திடு பாதமலர்
செற்றிடுப் பற்றிய மும்மலத்தை
சேவடிச் சீரதன் திறம்பேசிக்
கற்றிடு கலைத்தலைச் சிவஞானம்
கழலடி பணிந்திடு காலமிதே. 7

காலமே சக்கரங் கடுவேகம்
கட்டியும் நிறுத்திட யியலாதே
மூலமாய்ச் சக்கர மொன்றதனை
முன்னவர் காட்டியும் முயலாதே
சீலமே சக்கர மதுவிடுத்து
சினப்பகை உறவினை நீக்கிடுக
சூலமே சக்கரங் கொண்டபிரான்
சுந்தரத் திருவடி போற்றுமினே.
8

ஆக்கலு மழித்தலு மெதற்கென்று
ஆய்ந்திடும் நெஞ்சினர் அவர்தாமும்
நீக்கலும் நன்றென நினைத்திடுவார்
நீள்புவி நிலைமையை எண்ணிடுவார்

ஏக்கமும் தீர்த்திட வழிகாண்பார்
இறைவனின் செயலினை வியந்திடுவார்
ஊக்கமுந் தந்திடு முத்தமரை
உமையொரு பாகனாய் வணங்குவரே. 9

உமையொரு பாகனின் திருவருளே
உண்மையும் பொய்மையுங் காட்டுவிக்கும்
உமையொரு பாகனின் திருவருளே
உலகவர் செயலினைக் கூட்டுவிக்கும்
உமையொரு பாகனின் திருவருளே
உதவியாய் கென்றுமே துணையாகும்
உமையொரு பாகனின் பொன்னடியே
உத்தமர் வாழ்திடும் திருவீடே 10

விளம் மா காய்

தாயினும் நல்லோய் நின்னருளைத்
தந்தனை இன்றே நானுணர்ந்தேன்
பேயனாய்த் திரிந்தேன் பத்தியிலேன்
பிறப்பிலி தேவா நின்கருணை
தூயநின் தன்மைப் பெற்றுய்யத்
தொழுதனன் நாயேன் இருளகன்று
மாயமாம் பிறப்பை யறுத்திடுவாய்
மன்னவாக் கயிலை எம்பரனே. 3

மருத்துவன் கயிலை மலையரையன்
மாதொரு பாகன் மணிமிடற்றான்
பெருந்துயர் நீக்கும் பெருந்துறையான்
பிறப்பிலி யென்று மிறவாதான்
விருத்தனாய் பாலன் விதவிதமாய்
விரும்புவார் முன்னம் வந்தருள்வான்
அருந்தமிழ் தந்தான் பண்சேர்த்து
அடியினைப் பாட அருளினனே . 4

வெல்வனக் கேண்மின் ஐம்புலன்கள்
விருப்பந் தவிர்த்தல் மிகநன்றே
கொல்வனக் கேண்மின் குணமதனில்

கொடிதாம் பகைமை அறுவகையே
சொல்வனக் கேண்மின் சுடர்ரொளிநம்
சுத்தன் வெண்ணீ றணிந்தான்சீர்
செல்வன வுணர்ந்து சேவடியை
சிக்கெனப் பற்று வினையறவே.

பாடலிற் பெரியோய்ப் பனிவரையாய்
பரமனே யுந்தன் புகழறியேன்
ஆடலிற் பெரியோய் அம்பலவா
அருளிட வேண்டும் விண்ணப்பம்
கூடலூர் தன்னில் கால்மாற்றிக்
கோமகன் விருப்பம் முடித்தோனே
நாடினேன் நின்பால் குறிப்பறிவாய்
நாயினேன் விருப்பம் முடிப்பாயே. 5

மந்திர மன்னன் அஞ்செழுத்தை
மறையவர் சொல்லச் செவிகேட்பாய்
தந்திரங் காண்பாய் தலைகீழும்
தனித்தநற் பயனைத் தந்திடுமே
அந்தரக் கோனும் அயன்மாலும்
அறிந்திடா வலிமை பெற்றிடலாம்
சந்திரன் வாழும் சங்கரன்தாள்
சார்ந்திட. நம்மின் பிறப்பறுமே.
6

காப்பதைக் கழிப்பன் கடவுளவன்
காரிய .மென்றும் கருணையதே
பூப்பதைத் தடுப்பாய் நீயென்றால்
புண்ணிய மறியாச் செய்கையது
தீப்புகை உண்டேல் தீயுண்டு
திருந்திடக் கொடுத்தத் தேகத்தை
வாப்பினைப் பயங்கொள் வாழ்க்கையினை
வணங்கியே மகிழ்வாய் நன்றியதே 7

சிவசிவ யென்னும் மந்திரத்தை
சித்தையுள் மறவாய் யென்நாளும்

**பவக்கடற் கிடக்கும் நுன்தனக்கு**
**பற்றிடக் கொடுத்த நற்றோணி**
**உவலையாம் சமயர் உணராரே**
**உன்னுவாய் யதன்சீர் அளப்பறிது**
**தவத்தினர் பரவுஞ் சிவனடியை**
**தலையினால் வணங்க மறவாயே. 8**

**சிவாய நமவெனு மஞ்செழுத்தை**
**சிந்தை செய்குவாய் நாடோறும்**
**அபாய மில்லையெ னஔவையார்**
**ஆணை யிட்டதை அறியாயோ**
**கபால மேந்தியக் கண்ணுதலான்**
**கருணை கடவுளர் கரங்க்குவித்து**
**உபாய்ங் கேண்மினே உயர்பதமாம்**
**சிவமாம் தன்மையைப் பெறலாமே 9**

**வணங்குவேன் .சிவனை**
**********************************(நிரையொண்றாசிரியத்தளை கலித்தாழிசை)**

புரிசடைக் கடவுளே புகழ்ச்சியின் பெரியனே
வரிப்புலி உடையனே **வரைசிலைக் கரத்தனே**
கரியுரி உரித்தவா கலைமதி முடியனே
அரிவுனைத் தொழுதிட அவர்க்கருள் புரிந்தனை
பரிவுடன் பதம்தரப் பணிந்தன னுனைத்தினம்
----- பரகதி வரம்தரப் பணிந்தன னுனைத்தினம்.

**காய் விளம் காய்**

செற்றவனே திரிபுரம் பொடிபடவே
செங்கமலக் கழலடி தொழுவார்தம்
உற்றவனே உமையொரு பாகத்தாய்
ஊரார்தம் கடைமுனம் பலிகொண்டாய்
மற்றவரின் மருளினை மாற்றிடவே

மறைநான்கு மாறங்கம் சொன்னவனே
கொற்றவனே கோகழி மேயவனே
குரைகழலைத் தந்தருள் கோமளமே.
1

கோமளமே கூற்றனை குமைத்தோனே
குணமெட்டும் கொண்டவா பசுபதியே
நாமகளின் நாசியைக் கொய்தவனே
நரிகளையே பரியென விற்றவனே
மாமகத்தாய் குடந்தையில் மன்னியவா
மண்ணாதி பூதமே யெங்கோவே
ஆமாறு கண்டனக் அவிநாசி
அடியேனான் வாழ்வுற அடைக்கலமே
2

மா விளம் காய்

நீல கண்டனே நிறைமலரே
நிருத்தம் புரிந்தருள் தனிச்சுடரே
கால காலனே கனியமுதே
காக்குங் கருணையின் பெருங்கடலே
கோல அழகனே குரைகழலே
குன்றம் சிலையெனக் வளைத்தோனே
சீலங் காட்டியப் பரம்பொருளே
சிவனேச் சிறியனைக் காவாயே. 1

காவாய் கரியுரி போர்த்தோனே
கயிலை மலையுறை பெருமானே
நாவால் நான்மறைத் தந்தோனே
நரியைப் பரியென ஆக்கிவா
தேவாத் திருப்பெருந் துறையோனே
தில்லை யம்பல நடராசா
வாவா யெந்தனின் மருள்நீக்கி
வைப்பாய் விரைமலர்ப் பாதமதே. 2

நல்லான் சிவனருட் துணையோடு

நாளும் நல்லறம் இயற்றிடுமின்
வல்லான் அவன்திரு வாய்மொழியை
வாங்கப் போகுமின் திருக்குறிப்பால்
நில்லான் நிறைமலர் நிருத்தனவன்
நெஞ்சம் நெகிழ்திடப் பணிமின்காள்
தள்ளான் நம்மையும் தாள்சேர்ப்பான்
தாணு காப்பது வாய்மையதே. 3

அல்லல் வருவதன் காரணத்தை
ஆய்ந்தே பார்த்திடு நன்நெஞ்சே
சொல்லாற் செயலினால் நீபுரிந்த
சொல்லில் அடங்கிடாத் திவினையாற்
வல்லோன் வழங்குவன் வினைப்பரிசை
வாழ்த்தி வணங்குக அவன்கழலை
நல்லான் நடுநிலை அம்பலத்தான்
நாதன் பொன்னடி நன்மருந்தே.
4

நினைவு ளடக்கிய விடயங்கள்
நில்லா மறக்குமே பின்னாளிற்
கனவுள் காண்பன பின்னழியக்
கண்டோம் காணுதிர் வாய்மையிது
மனத்துள் வாங்கிய சிவஞானம்
மாறா தென்றுமே மாக்கருணை
சினதுட் கிடந்துநீ தவியாதே
சிவன்தாள் வணங்கிடத் தலைகொள்ளே. 5

தலைவன் ஒருவனே நமையெல்லாம்
தாங்குந் தன்மையன் பெருங்கருணை
அலைகொள் கடல்விடம் உண்டபிரான்
ஆக்கிக் காத்திடு மைந்தொழிலின்
நிலையில் மாற்றமும் நிகழாதே
நிருத்தன் தில்லைவாழ் அம்பலவன்
கலைகள் காட்டுவான் நமையாண்டு
கழல்கீழ் மன்னிட அருளுவனே 6

அன்பருடன் கூட்டுவித்தாய் திருமுறைகள்

அடியேனும் தெளிவுறவே யெடுத்துரைத்தாய்
இன்பமுற அஞ்செழுத்தைச் செவிசேர்த்தாய்
இருப்பிடத்தைக் கைகாட்டிக் காட்டுவித்தாய்
என்புகளை மாலையென புனைவோனே
இறப்புடனே பிறப்பையும காட்டுவித்தாய்
வன்பகைகள் புறந்தள்ளி நிற்பாருடன்
வாழ்ந்திடவே செய்திடுவாய் நற்பரிசே.

நற்பரிசாம் பிறவாமை கண்டுணர்ந்து
நாளெல்லாம் நியமங்கள் இயற்றிடுவார்
சொற்பலவும் கேட்பிக்கச் செய்திட்டாய்
சுதந்திரமாய் நீறணியச் செய்வித்தாய்
கற்பகமே கடைநாயேன் கசிந்துருகி
கறைகண்டா யெந்தையென நெஞ்சுருகி
நிற்பேனே பேரின்ப முத்தியெனும்
நிழலதனை வழங்கிடுவாய் கண்டேனே.

## அருஞ்சொற்பொருள் .

உன்ன = சிந்திக்க, முப்பொருளில் = பதி பசு பாசத்தில்,

அஞ்செழுத்துள் ஓரெழுத்தாய் = நமசிவய என்பதில் ய என்னும் எழுத்து, தத்துவங்க ளாறாறை = 36 தத்துவம், மன்னுஞ் = நிலைபெற்ற, கண்ணுதலான் = நெற்றியில் ஒரு கண்ணை உடையவன், பொய்கை = குளிர்ந்த நன்னீர் ஊற்று,

ஆளாவாய் = அடிமை நிலையேற்றல், ஏத்து = வழிபாடு செய்தல், கரணங்கள் = ஞானேந்திரியம் கன்மேந்திரியம் அந்தகரணம் என்பன, சிவச்சின்னம் = உருத்திராக்கம் திருநீறு அணிதல். வார்சடை அண்ணலையே = நீண்ட சடை யுடைய சிவபெருமான், ஏழை = பெண், தாள்= பாதம், வீடருளி= முக்தியைத் தந்து , மலமில்லான்= ஆணவம் கன்மம் மாயை என்பன. தண் = குளிர்ச்சி, பண் = இசை, சாத்திரம்= ஞான நூல், பெற்றம்= காளைமாடு, சீலத்தார்= ஒழுக்கமுசடையார், செற்றார் = தீயகுணமுடையார், பூதம்= நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் என்பன, திண்சிலை= வலிமை மிகுந்த வில், வீடுமே, நண்ணி= சென்று சேர்ந்து